சரித்திர காலத்திற்கு முற்பட்ட

# பழந்தமிழர்

ஆக்கியோன் :
யாழ்ப்பாணத்து நவாலியூர்,
திரு. ந. சி. கந்தையா பிள்ளை
[1. தமிழர் சரித்திரம் 2. தமிழகம் 3. அகநானூறு வசனம் 4. கலித்தொகை வசனம் 5. பரிபாடல் வசனம் 6. பதிற்றுப்பத்து வசனம் 7. புறப்பொருள் வசனம் 8. கலிங்கத்துப்பரணி வசனம் 9. தேம்பாவணி வசனம் 10 அறிவுரைக்கோவை 11. அறிவுரை மாலை 12. பத்துப்பாட்டு வசனம் என்பனவும் இன்னும் பிறவுமாகிய பல நூல்களின் ஆசிரியன்]



ஒற்றுமை ஆபீஸ்
தியாகராயநகர்
மதராஸ்

பதிப்புரிமை] 1943 [விலை 1—12—0

---

1.—2. சென்னை சர்வகலாசாலை வித்துவான் பரீட்சைப் பாடங்கள் 8. இலங்கை ஜே. எஸ். ஸி. பாடம், 1941-1942 10. இலங்கை எஸ். எஸ். ஸி. பாடம். 1943-1944 10. சென்னை சர்வகலாசாலை பீ.ஏ., (B.A.) பரீட்சைப் பாடம்—1945.

## பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 5 | மொழிவதும் | மொழிகுவதும் |
| 4 | 28 | பழங்கிஞர்கள் | பழகிஞர்கள் |
| 16 | 9 | தொலாகாப்பியச் | தொல்காப்பியச் |
| 20 | 22 | Summons | Sumarians |
| 21 | 20 | வேறுபந்தி | வேறுபடுத்தி |
| 27 | 2 | வாலனே | வாசனே |
| ,, | 12 | வலியுத்து | வலியுறுத்து |
| 50 | 21 | முழுகாட்டிப் | முழுக்காட்டிப் |
| 51 | 11 | ாளகக்கொள்வர் | ளாகக்கொள்வர் |
| 72 | 11 | என்றும் | என்னும் |
| 92 | 11 | இக்குவா | இக்குவாகு |
| ,, | 24 | திணைத்துச் | திளைத்துச் |
| 99 | 22 | துரோதம் | திரோதம் |
| 104 | 15 | சீன் எழுத்த்துக்கும் | சீன எழுத்துக்கும் |
| 113 | 28 | வைக்க | வைக்கச்செய்த |
| ,, | 31 | கைலாத்துக்குச் | கைலாயத்துக்குச் |
| 117 | 11 | பாரசு | பாரரசு |

## ஆயத்தமாயுள்ள நூல்கள்

1. சங்ககாலத் தமிழர்
2. தமிழர் வரலாற்றுச் சுருக்கம்
   (ஆதிமுதல் தமிழ்வேந்தர் இறுதிவரை)
3. சங்கநூலாராய்ச்சி
4. பொருளுரை மலர்—பகுதி 1
5. ,, ,, ,, 2
6. கல்லாட வசனம்.

# முன்னுரை

இக் கண்ணகன் ஞாலத்தே பற்பல மொழிகளை வழங்கும் மக்கட் கூட்டத்தினர் பலர் ஆங்காங்கு வதிகின்றனர். இஞ்ஞான்று அம்மக்கட் கூட்டத்தினர் ஒருவரோடு ஒருவர் தொடர்பிலர் எனத் தோன்றினும், அன்னோர்க்கு உற்பத்தி ஒரு மத்திய மனுக்குலமே எனப் புலனாகின்றது. அம்மக்கட் பெருங்குலத்தினர் கறுப்பு அல்லது மங்கிய கறுப்பு நிறத்தினராகத் திகழ்ந்தனர்[1]. அத் தொல் குலத்தினர் சுமேரியர் அன்றேல் தமிழராவரென்பது வரலாற்று வீரர் முடிபு. ஆராய்ச்சியில், சுமேரியர், தமிழரினின்றும் அகன்றுசென்று பரசிகத்தின் மேற்கே குடியேறிய சிறுகூட்டத்தினரொருவராகக் காணப்படுகின்றனர். அன்னோர், எல் அல்லது எல்லம் என்றும் பிற்காலத்து ஈழம்[2], இலங்கை என்றும் அறியப்பட்ட சிங்கள

1. The more ancient races of men were all dusky, or black, and fairness is new……brunet peoples as to speak the basic peoples of our modern world—O.L.O.H.—H.G. Wells.

2. ஈழம் என்பது எல் என்னும் சொல்லின் திரிபு; எல், இல் எனத் திரியும். (எல், எல்+அம்=எல்லம்=இல்லம்=ஈலம்=ஈளம்=ஈழம்.) சிங்கவமிச அரசருக்குப்பின்(சிங்கவாகுவின் புதல்வனாகிய விசயனுக்குப்பின்) எல்லர் எனப்பட்ட ஈழத்து மக்கள் (சிங்க+எல்லர்) சிங்களர் எனப்பட்டனர். (சிங்க + எல்லர்=சிங்கலர்=சிங்களர்) இவ்வாறே அவர் மொழியாகிய எல் (சிங்க+எல்+அம்+சிங்கலம்=)சிங்களம் என்றாயிற்று. சிங்களம் என்றாவதற்கு முன் இலங்கைப் பழைய மக்களின் மொழி எலு எனப்பட்டது.

மாகறல் கார்த்திகேய முதலியார் தாமம் என்னும் சொல்லினின்று தமிழ் பிறந்ததெனக் கூறியுள்ளார். தாமம்

(சிங்க + எல் + அ) தீவினின்றும் சென்றார்கள் எனத் துணிதற்கேற்ற ஏதுக்கள் சில உள. அவையிற்றை நூலகத்துக் கூறினும். பண்டிதர் சவரிராயன் எல்லமே தமிழரின் ஆதி இருப்பிடம் எனத் துணிந்தமையும் கருத்திற் கொள்ளத் தக்கது. ஒரு மத்திய வழிபாட்டினின்றே உலகமக்களின் வழிபாடுகள் எழுந்தன. அவ்வழிபாடு ஞாயிற்று வழிபாடு அல்லது சிவன் வழிபாடாகும். சிவன் வழிபாடே உலகில்மிகப் பழமையுடையது.[3]

---

என்னுஞ் சொல். சூரியனையும் ஒளியையும் உணர்த்தும். சூரியஒளி மலையின் முக்கியத்தால், எல்லம், தாமம்+எல்லம் என வழங்கியிருத்தல் கூடும். தாமம் என்பது தாம் என மருவித் (தாம்+எல்லம்) தாமெல்லம் என வழங்குதல் கூடும். எல்லம் ஈழமானமை முன்னர் காட்டப்பட்டுளது. தாம்+ஈழம்(தாம்+ஈழம்=தாமீழம்=தமிழம்=) தமிழ் என மருவிற்று. சூரியனுக்கு ஆதிப்பெயர் சிவன் என்பது நூலகத்துக் காட்டப்பட்டுள்ளது. ஆகவே தமிழ் என்பதற்குச் சிவன் ஒளி என்பது பொருள். மேற்கு ஆசியமக்களும் பகற்கடவுளே தங்கள் மொழியையும் ஞாயப்பிரமாணங்களையும் அருளிச்செய்தார் என நம்பினார்கள், கமுரபி என்னும் பபிலோனிய அரசனுக்குச் சூரியக்கடவுள் ஞாயப் பிரமாணங்களை அருளிச்செய்யும் பாவனையில் செதுக்கப் பட்ட சிலை ஒன்று இன்றும் அங்கு காணப்படுகின்றது. கமுரபி என்பதில் கம். கமலம் என்பதின் சுருக்கமென்றும் கமலம் சூரியனைக் குறிக்கும் அடையாளமென்றும் வடல் (waddell) என்னும் ஆசிரியர் கூறுவர்.

3. "Among the many revelations that Mohenjo-Daro and Harappa have had in store for us, none perhaps is more remarkable than this discovery that Saivaism has a history going back to the Chalcolithic Age or perhaps even further still, and it thus takes its place as the most ancient living faith in the world"—Sir John Marshall in

காலவெளியின் ஓர் மண்டலத்தே நின்று நோக்கு மிடத்து உலகமக்கள் ஒன்று, நாகரிகம் ஒன்று, மொழி ஒன்று, வழிபாடு ஒன்று எனத் தெள்ளிதிற்றோன்றும். இவ்வுண்மைகளையே பல முகத்தாலிந்நூல் அகலக் கூறுகின்றது. இந்நூல், எமது 'தமிழர் சரித்திரத்திற்கும்' மேல் அச்சில் வரும்' 'சங்ககாலத் தமிழருக்கும்' முன்னுரை போன்றது.

தமிழ் என்னுஞ் சொல்லின் உற்பத்தியைக் குறித்துப் பலர் பலவாறு கூறியுளர். தமிழ் என்னும் சொல், இடப்பெயர் மக்களுக்காதல் மக்கட்பெயர் மொழிக்காதல் என்னும் ஓர் இயற்கை விதியைப் பின்பற்றித் தோன்றி யிருத்தல் வேண்டுமேயன்றி வேறு எம்முறையிலும் தோன்றியிருக்க முடியாதென்பது எமது துணிபு.

இந்நூல் மிகக்குறுகிய கால எல்லையில் (சில நாட் களில்) எழுதி அச்சிட நேர்ந்தமையின் இதனகத்தே வழுக்கள் சில நுழைந்திருத்தல் கூடும். கோதை நீக்கிப் பருப்பையேகொள்வர் பயன் தெரிவார். அவ்வியல்பின ராகிய சான்றோர் இந்நூலிற்காணும் குற்றம் நீக்கிக் குணமே கொள்வரெனத் தெளியு மென்னுள்ளம்.

சென்னை
20—11—43 } ந. சி. க.

---

his preface to 'Mohenjo-Daro and the Indus civilization' Vol. I. P. VII.

எகிப்தியரின் அமன் கிரேக்காது சியஸ், அப்பலோ, ரோமரது யூபிதர், மேற்கு ஆசியமக்களது எல், இல், பகல், வேல், அசுர் என்னும் கடவுளர் வணக்கங்கள் இச் சிவ வழிபாட்டினின்றும் எழுந்தனவே. இப்பெயர்கள் எல்லாம் சிவன் அல்லது ஞாயிறு என்னும் கடவுளையே குறிக்கின்றன.

# பொருளடக்கம்

# BIBLIOGRAPHY


1. Dravidian Elements in Indian culture-G. Slater.
2. Makers of civilization in Race and History—L. A. Waddell.
3. Indo-Sumerian seals Deciphered. Do.
4. Introduction to natural History of Language. T. G Tucker.
5. Historian's History of the world.
6. Encyclopaedia Brittannica.
7. Rigvedic India—Abinnas Chandra Das.
8. Valmiki Ramayana—Translation by Griffith.
9. Outline of History—H. G. Wells. [Huxley.
10. Man's Place in Nature and Other Essays—
11. Pre-Aryan and Pre-Dravidian.
12. Stone Age in India—P. T. Srinivasa Iyengar.
13. Pre-Aryan Tamil culture ,,
14. Dravidian India—T. R. Sesha Iyengar.
15. Tamilian Antiquary. [—K. N. Dikshit.
16. Pre-Historic Indus Valley Civilization.
17. A Brief History of civilization. —J. H. Hoyland.
18. An ancient History of the near east. —R. H. Hall.
19. Pre-Historic India.—Mitra.
20. A First Book of World History.—Hearnshaw.
21. Egyptian myth and Legend—Mackenzie.
22. Herodotus—Eng. Translation.
23. Sun and the Serpent—Oldham.
24. Scripture History.
25. Descent of man—Darwin.
26. Bible—Old Testament. [—Dr. O. Schrader.
27. Pre-historic antiquities of Aryan people.
28. New Review—1936.
29. *செங்கோன் தரைச் செலவு.*
30. *மொழி நூல்—மாகறல் கார்த்திகேய முதலியார்.*

(பிறநூல்களை மேற்கோள் அடிக்குறிப்புகளிற் காண்க.)

சரித்திர காலத்திற்கு முற்பட்ட

# பழந் தமிழர்

## தோற்றுவாய்

"சதுமறை ஆரியம் வருமுன் சகமுழுது நினதாயின்
முதுமொழி நீயனுதி யென மொழிவதும் வியப்பாமே"

எனப் பேராசிரியர் சுந்தரம்பிள்ளை அவர்கள் ஐம்பது ஆண்டுகளின் முன் நவின்றதை அக்கால உலகம் ஏற்றிலது.[1] அக்காலம் தமிழரின் பழைய வரலாறு ஆர் இருள் மூடிக்கிடந்தது. நில, மக்களின, மொழி நூலார்களதும், பழம்பொருள் ஆராய்ச்சி ஆளர்களதும் தொடர்ந்த பேருழைப்பினுல் உலகமக்களின் வரலாறுகள் பூரணவெளிச்ச மடைந்துள்ளன. அவ்வரலாறுகளை யெல்லாம் நோக்குமிடத்துத் 'திராவிடர்' எனப்படும். தமிழ்ப் பெருங்கூட்டத்தினரே உலக சரித்திரத்தில் பழமைபெற்று விளங்குவதைக் காணலாகும். இதைக்காணும் ஒவ்வொரு தமிழ் மகனும் உவகையும் இறும்பூதும் எய்துவான் என்பதில் சந்தேகமென்ன!

ஏட்டிலடங்காத பழமைதொட்டு இவ்வுலகில் சீருஞ் சிறப்பு மெய்தி நாகரிகத்தின் உன்னத நிலையை அடைந்து விளங்கினோர் எகிப்தியர் சுமேரியர் என்

---

1. ஆனல் இப்பொழுது அவர் கூறிய உண்மை அறிஞர் போற்றப்படுகின்றது.

னும் இரு மக்கட் கூட்டத்தினரென்பது உலக சரித்தி ராசிரியர்களின் முடிபாயிருந்தது. அவர்கள் அவ் வகை முடிவுக்கு வருதற்கு அம்மக்களின் புராதன நாகரிக சின்னங்கள் ஆதாரமளித்தன. தமிழரின் பழைய நாகரிகத்துக்குரிய சின்னங்கள் சமீபகாலம் வரையில் கண்டுபிடிக்கப் படாமல் இருந்தமையின் அவர்களின் தொல்லை வரலாறு மறைவாகவே இருந் தது. ஆகவே தமிழரதும் தமிழதும் ஆராய்ச்சியில் இறங்குவோர், தமிழர் இன்னொரு நாட்டிலிருந்து வந்து இந்தியாவிற் குடியேறினார்களென்றோ, தமிழ் வேறு மொழிகளினின்று உதித்ததென்றோ கூறுவது இயல்பாக இருந்தது. சில்லாண்டுகளின் முன் (1921) மகன்யோதரோ ஹரப்பா என்னும் சிந்துநதிப் பள்ளத்தாக்கின் புதையுண்ட புராதன நகரங்கள் அகழ்ந்து கண்டுபிடிக்கப்பட்டு அவைகளிற் கிடைத்த பழம்பொருள்கள் ஆராயப்பட்ட பின்னர் தமிழரை யும் தமிழ்மொழியையும் பற்றிய ஆராய்ச்சி வேறு வகையில் திரும்புவதாயிற்று. தீர்மானமாகத் தமிழ் மக்களுடையன என்று துணியப்படும் சிந்துவெளி நகரங்களின் சிந்தைக்கு எட்டாத பழமையைக்கண்ட மேல்நாட்டு ஆராய்ச்சி விற்பன்னர் மலைத்து மூக்கின் மீது விரல்வைத்து நீண்ட சிந்தையராயினர். சிந்து வெளி நாகரிகத்தை விளக்கும் நூல்கள் பல ஆங்கில மொழியிலும், சில தமிழிலும் வெளிவந்துள்ளன.

தமிழ் மக்களின் ஆதி இருப்பிடம், அவர்களி னின்றும் பிரிந்து சென்று வெவ்வேறு நாடுகளிற் குடியேறி நாடு நகரங்களை அமைத்து இராச்சியங் களைக் கோலிப் பழந் தமிழர் நாகரிகத்தை உலகிற்

பரப்பி வெவ்வேறு சாதியினர் எனப் பெயர் பெற்றுப் பண்டைக்காலத்தே விளங்கிய குழுவினர்களது வரலாறு முதலியவற்றை எளிதில் எவரும் உணருமாறு நுவலும் நூல்களோ அரியன. ஆகவே இவ்விரு பொருள்களையும் தெள்ளிதில் விளக்கும் கருத்தினைக் குறிக்கொண்டு இந்நூல் அமைவதாயிற்று.

---

# இயல் — 1

## மனிதரின் ஆரம்பகாலம்

### தோற்றம்

[1]நாம் வாழும் இப்பூமி ஆதியில் உயிர்த்தோற்றமில்லாத அனற் பிழம்பாக விருந்தது. அது வான வெளியில் எண்ணில்லாத காலஞ் சுழன்றுகொண்டிருந்தது. அப்பொழுது அதன் மேலோடு ஆறத் தொடங்கிற்று; ஓரளவு ஆறியபின் சிறிய நீர்வாழ் உயிர்களும் தாவரங்களும் தோன்றின. காலத்துக்குக் காலம் பூமி அடைந்திருந்த பலவகையான வெப்ப தட்ப நிலைகளுக்கேற்ப வாழக்கூடிய எத்தனையோ வகையான பிராணி யினங்கள் காலந்தோறும் தோன்றி மறைந்தன. அவ்வகைப் பிராணிகளின் என்புக் கூடுகள் இப்பூமியின் ஆழத்திற் கண்டு எடுக்கப்பட்டன. ஆதியிற் றோன்றிய நீர்வாழ் உயிர்களே படிப்படியாக விருத்தி எய்தித் தரைவாழ் பிராணிகளாகிப் பின் மனிதன் வரையில் விருத்தியடைந்தன என்பர், 'தோற்ற விருத்திநூலார்' (Evolutionists).

---

1. இற்றைஞான்றை நிலநூல், மக்கள்நூல் வல்லோர் கூறுவதின் சுருக்கம்.

அற்றன்று ஒவ்வொரு படைப்பும் அச்சு மாறுமல் இறைவனுல் படைக்கப்பட்ட தென்பர் பிறர். எவ்வாருயினும் மனிதப்படைப்பே இறுதியான தென்பது எல்லோரது கொள்கையுமாகும்.

மனிதன் இப்பூமியில் வாழ ஆரம்பித்துப் பத்து அல்லது இருபது இலட்சம் ஆண்டுகளாகின்றன என்பர் இக்கால ஆராய்ச்சியாளர். ஆதிகால மனிதன் இக்கால மனிதனைவிடத் தோற்றத்திற் சிறிது மாறு பட்டவனுயிருந்து காலத்தில் சிறிது சிறிதாக மாற்ற மடைந்து இற்றைக்கு 50,000 வருடங்கள் வரையில் இக்கால மனிதனின் தோற்றத்தை அடைந்தான் எனக்கூறி, மிகப் பழையகாலத்தே வாழ்ந்த மக்களின் மண்டை ஓடுகளை ஆதாரமாகக் காட்டுவர் மக்கள் நூல் ஆராய்ச்சிவல்லார்.

## கற்காலம்

சரித்திரகாரர், மனிதன் ஆயுதங்கள் செய்ய உபயோகித்த பொருள்களைக் கொண்டு காலங்களைக் குறிப்பிடுகின்றனர். மனிதன், கற்களால் முரடான ஆயுதங்கள் செய்து உபயோகித்த காலம் பழைய கற்காலம் எனப்படும். இக்கல்லாயுதங்கள் காலத் திற்குக் காலம் பலபடிகளிற் செய்யப்பட்டன. இவ் வாறு ஒவ்வொரு படியான கல்லாயுதங்கள் செய்யப் பட்ட காலமும் பழைய கற்காலத்தின் உபகாலங்க ளாகும். முரடான கல்லாயுதங்களைச் செய்து பயன் படுத்திய மக்கள் ஆயுதஞ் செய்வதில் திறமை அடைந்து அழுத்தமான கல்லாயுதங்களைச் செய்யப் பழங்கினுர்கள். இது இற்றைக்குப் 15,000 வருடங்

களுக்கு முன் இருக்கலாம் என்பர் பழம் பொருள் ஆராய்ச்சியாளர்.

## உலோககாலம்

அடுத்தபடியாக மனிதன் செம்பைக் கண்டு பிடித்தான். செம்பினால் ஆயுதங்கள் செய்யப்பட்ட காலம் செம்புக்காலம் எனப்படும். பின்பு தகரம் கண்டுபிடிக்கப்பட்டது. தகரத்தையும் செம்பையும் கலக்க வெண்கலம் என்னும் உறுதியான உலோகம் உண்டாவதை மனிதன் அறிந்து அதனால் ஆயுதங் களைச் செய்யலானான். வெண்கலத்தினால் ஆயுதங்கள் செய்யப்பட்ட காலம் வெண்கல காலம் எனப்படும். பின்பு கரும்பொன் எனப்பட்ட இரும்பு கண்டுபிடிக் கப்பட்டது. இரும்பு கண்டுபிடிக்கப்பட்ட பின் கல்லாயுதங்கள் கைவிடப்பட்டன.

## வேடன், இடையன், உழவன்.

மனிதனின் முன்னேற்றம், ஆயுதங்கள் செய்யப் பழகிய முறையில் வளர்ச்சி உற்றது போலவே, வாழ்க்கை முறையிலும் உயர்வடைந்தது. ஆரம்ப கால மனிதன் உணவின் பொருட்டு இடங்கள் தோறும் அலைந்துதிரியும் வேடனாகவிருந்தான்; பின்பு காட்டில் வாழ்ந்த ஆடு மாடு பன்றி முதலியவை களைப் பழக்கி வளர்த்து அவை கொடுக்கும் பிரயோச னங்களை உண்டு வாழும் இடையனாக விருந்தான்; அடுத்த படியில் ஓரிடத்தில் தங்கிப் பயிரிட்டுத் தானி யங்களை விளைவித்து அவையிற்றை உண்டுவாழும் உழ வனானான். பின்பு நாடு நகரங்களும் இராச்சியங்களும் ஏற்பட்டன. பயிர்ச் செய்கைக்கேற்ற ஆற்றோரங் களிலேயே ஆதிகால இராச்சியங்கள் எல்லாம்

அமைந்த வரலாற்றினைச் சரித்திரங்களிற் படிக்கின்றோம்.

### மக்கட் குலங்கள்

மக்கள் பழைய கற்காலத்தின் ஆரம்பத்திலேயே உலகின் பல பாகங்களிற் சென்று வாழ ஆரம்பித்தனர்[1]. உலகின் பல பாகங்களிற் காணப்பட்ட அக்கால மக்களின் மண்டை ஓடுகளும், பிற சின்னங்களும் ஒரே வகையாகக் காணப்படுகின்றன. இதனால் நிறம், மண்டை ஓடு, மயிர், கண்களின் நிறம், மொழி ஆதிய வற்றால் கூறுபடுத்தி அறியக்கூடிய மக்கட்குலங்கள் அக்காலத்திற் றோன்றவில்லை எனத் தெரிகின்றது.[2] புதிய கற்கால மக்களின் மண்டை ஓடுகள் வெவ்வேறு வகையாகக் காணப்படுதலின் அக்காலத்தில் நிறம் முதலியவற்றால் வேறு படுத்தி அறியக்கூடிய மக்கட் கூட்டங்கள் தோன்றியிருந்தன வென்று தெரிகின்றது.

### மக்கட் குலங்கள் எழுதற்குரிய காரணங்கள்.

[3]இப்பூமியின் பல பாகங்கள் பலவேறு வெப்ப தட்ப நிலையுடையன. வெப்பதட்ப நிலைகளால் மக்களது மேனியின் நிறம் மாறுபடுகின்றது. மேனியின் நிறம் போலவே கண் மயிர் ஆதியவற்றின் நிறமும் மாறுதல் அடைகின்றது. உண்ணும் உணவு, புரியும் தொழில்களுக்கேற்ப உடம்பின் விருத்தி, உறுப்புகளின் வளர்ச்சி ஆதியன வேறுபடுகின்றன.

---

1. Outline of History H.G. Wells p. 74.
2. A Brief History of Civilization J.S. Hoyland. p. 26
3. Descent of man—Darwin — Thinkers Library Edition p. 224.

இம்மாறுபாடுகள் சந்ததி சந்ததியாக வந்து ஒரு கூட்டம் மக்கள் இன்னொரு கூட்டம் மக்களினின்றும் நிறம், உயரம், மண்டை, தோற்றம் முதலியவற்றால் பிரித்தறியக் கூடியவர்கள் ஆகின்றார்கள்.

### மக்கள் தனித்தனிக் கூட்டத்தினராகப் பிரிந்து வாழ்தற்குரிய காரணம்

இப்பூமி காலத்துக்குக் காலம் பலமாற்றங்கள் அடைந்து வருகின்றது, மலை கடலாகவும் கடல் மலையாகவும் காடு வனாந்தரமாகவும், வனாந்தரம் காடாகவும் பலமுறை மாறியதுண்டு. இப்பொழுது அத்லாந்திக் சமுத்திரம் கிடக்கும் இடத்தில் பன்னிரண்டு அத்லாந்திக் கண்டங்கள் தோன்றி மறைந்திருக்கலாம் என்றும் இப்பொழுது கிழக்குத் தீவுகள் எனப்படுவன அக்காலம் இந்து சமுத்திரத்தினூடே ஆசியாக்கண்டம் போன்று கிடந்து மறைந்து போன பெரிய கண்டம் ஒன்றின் மலைகளாகலாம் என்றும் கூறுவர் ஹக்ஸ்லி என்னும் ஆசிரியர்[1]. இவ்வகையான குழப்பங்களால் ஒரு கூட்டத்தினரிலிருந்து ஒரு கூட்டத்தினர் தனித்து வாழ நேரும். இவ்வாறு நீண்ட காலம் வாழுதலால் மொழி, கொள்கை, கலை ஆதியன வேறுபட்டு, அவர் தனிச்சாதியினராகப் பரிணமிப்பர். ஒரு கூட்டத்தினர் நிறம் முதலியவற்றால் மாறுபட்ட இன்னொரு கூட்டத்தினராக மாறுதற்கு 300 தலை முறைகளுக்கு மேலாகுமென்பர் டார்வின் என்னும் ஆசிரியர்.

---

1. Man's Place in Nature and Other Essays p. 251 —Thomas Huxley.

## மேல்நாட்டு ஆசிரியரின் பழைய சாதிப்பிரிப்புகள்.

விவிலிய வேதத்தின் பழைய ஏற்பாடு, நோவாவுக்கு (எபிரேயரின் மனு) சாம், காம், யபெத்து என்னும் மூன்று புதல்வர்கள் இருந்தார்களென்றும் அவர்கள் முறையே ஆசியா, ஆபிரிக்கா, ஐரோப்பா என்னும் நாடுகளிற் குடியேறி மக்கட் சந்ததியைப் பெருக்கினுர்கள் என்றும் கூறுகின்றது. இக்கூற்றினைக் கடைப்பிடித்த மேல்நாட்டாசிரியர்கள், பழைய ஆபிரிக்கமக்களைக் கமத்தியரென்றும், ஆசியமக்களைச் செமத்தியரென்றும், ஐரோப்பிய மக்களை ஆரியரென்றும் சரித்திரநூல்களிற் குறிப்பிடுவர். இற்றைஞான்றை மக்கட்குல ஆராய்ச்சியாளர் நிறம் உடற்கூறு முதலியவைகளை நோக்கி, கறுப்பு மக்களை நிகிரோவர் என்றும், வெண்மக்களை ஆரியரென்றும் மஞ்சள்நிற மக்களை மங்கோலிய ரென்றும் பிரிப்பர். ஆரியமக்கள் காக்கேசியர் எனவும்படுவர். காக்கேசியர், வடகாக்கேசியர் தென்காக்கேசியர் என இரண்டாகப் பிரிக்கப்படுவர். மத்தியதரைச் சாதியினர் திராவிடர், பொலினீசிய சாதியினர் ஆதியோர் தென்காக்கேசிய இனத்தில் அடங்குவர்.

## மக்களின் தொட்டில்
அல்லது
## ஆதி இருப்பிடம்

இவ்வாராய்ச்சியில் மேல்நாட்டாசிரியர்கள் மிக முயன்றிருக்கிறுர்கள். விவிலிய வேதத்தின் பழைய ஏற்பாட்டில் மக்கட் படைப்பு எங்கு உற்றதெனக் கூறப்படவில்லையாயினும் அது சின்னஆசியாவை அடுத்த இடங்களாகலாமெனச் சிலர் அனுமானித்துக்

கூறுவர். ஆராய்ச்சியாளரின் முடிவுகளை எல்லாம் ஒருங்குவைத்தாராய்ந்தஎச். ஜி.வெல்ஸ்என்னும்பேராசிரியர், கிழக்காபிரிக்கா மத்தியதரைக் கடல் கிழக்குத் தீவுகள் இந்தியா முதலியவைகளை உள்ளடக்கிய நிலப்பரப்பு ஒன்று இந்து சமுத்திரத்துள் மூழ்கிப் போயிற்றென்றும், அங்கு தான் மக்கட்குலங்கள் தோன்றுவதற்கு அடிப்படையான மக்கட்பெருங் குழுவினர் தோன்றியிருந்தார்களென்றும், அவர்கள் கறுப்பு அல்லது மங்கிய கறுப்பு நிறமுள்ளவர்களாயிருந்தார் கள் என்றும் கூறுவர்.[1] இந்தியாவின் தொடர்பாகத் தெற்கே விரிந்து கிடந்த பெரு நிலப்பரப்புக் கடலால் விழுங்கப்பட்ட தென்னும் பழைய வரலாறு பண்டைத் தமிழ் இலக்கியங்களாலும், பழைய இலங்கைப் புத்தர் நூல்களாலும், புராணங்களாலும் காப்பாற்றப் பட்டு வந்திருக்கின்றது. நிலநூலாரும் இதற்குச் சான்று பகர்கின்றனர்,

நடுக்கோட்டை அடுத்த தேசங்களில் வாழும் மக்கள் கறுப்பு அல்லது மங்கிய கறுப்புமுதல் மங்கிய சிவப்பு நிறமுள்ளவர்களாகக் காணப்படுகின்றனர். ஆதிமக்கள் கறுப்பு அல்லது மங்கிய கறுப்புநிற முள்ளவர்கள் எனப்படவே அவர்கள் நடுக்கோட்டை அடுத்த யாதோ ஓர் இடத்தில் தோன்றிப் பெருகினார்கள் என்பது தானே பெறப்படும்.

பழம் பொருள் ஆராய்ச்சியாளர் இவ்வுலகம் முழுமையிலும் கிடைத்த மக்களா லுபயோகிக்கப் பட்ட பொருள்களை எல்லாம் ஒருங்கு வைத்து ஒப்பு நோக்கி மக்களின் பழமையை ஆராய்ச்சி செய்வர்.

---

1. Outline of History H.G. Wells, pp. 14 and 76.

இவ்வகை ஆராய்ச்சிப் புலமையிற் றலைநின்றோர் பலர், இந்தியநாடே மக்கட் குலத்தின் தொட்டிலாகும் என்னும் முடிவுக்கு வந்துளர். அன்னோர் முடிபுகள் பல எமது முன்னைய நூல்களில் எடுத்துக் காட்டப் பட்டன [1].

"தென்னிந்தியாவின் பகுதியாகிய தக்கணத்தில் புதிய கற்கால சின்னங்கள் மாத்திரமல்ல, மிகப்புராதன பழங்கற் காலசின்னங்களும் அநேகம் காணப்படுதலே தென்னிந்தியா ஆதிமக்களின் தொட்டில் என்னும் தீர்மானத்தை உறுத்துதற்கு ஏதுவாகின்றது[2]."

"**சென்னை மாகாணம் மக்கட்குலத்தின் தொட்டில்.** *சேர்யோன் இவான்சு என்பவர்,தொறன்றோ என்னு மிடத்திற் கூடிய பிருத்தானிய மக்கள் பேரவையில், தென்னிந்தியா ஆதிமக்களின் தொட்டிலாகு மெனத் தனது தலைமைப் பேருரையில் குறிப்பிட்டுள்ளார். அதில் இப் பூஉலக மக்கள் செய்து உபயோகித்த எல்லாப் பழங்கால ஆயுதங்களின் வடிவங்களெல்லாம் காட்டப்பட்டு ஆராயப்பட்டிருக்கின்றன.[3]"

"நருமதைப் பள்ளத்தாக்கின் பருக்கைக் கற் களுக்கிடையில் அடி அழிந்துபோன சில மிருகங் களின் எலும்புகளோடு ஒரு பழங்கற்கால ஆயுதங் கண்டெடுக்கப்பட்டது. இதே வகையான இன்

---

1. தமிழகம் ப.33-35 தமிழர் சரித்திரம் ப.172-175.

2. Indian Science congress Hand book-a Short sketch-of the ancient History of South India. Rao Sahib S. Krishna wami Aiyengar, M.A. Ph. D.

3. James Foote—quoted in Siddhanta Depika Vol. 1 No. 4. * Sir John Evans.

னுென்று கோதாவரிப் பள்ளத்தாக்கிற் கண்டெடுக்கப் பட்டது. இப் பருக்கைக் கற்கள் திரள ஆரம்பித்து 400,000 வருடங்களாகின்றனவென்று சொல்லப் படுகிறது.

"பழைய கற்காலத்தின் நீண்ட பழமையைப் பற்றி பூட் (Foote) என்னும் ஆசிரியர் அறிக்கை செய்திருப்பது வருமாறு. பருக்கைக்கற்படைகளின் கீழ் வெள்ளம் வாரடித்துச் சென்றுவிட்ட சரியான பழையகற்கால ஆயுதங்கள் (கூர்ச்சரத்தில்) கண்டு பிடிக்கப்பட்டன. அதற்கு மேல் சரமதி ஆற்றினுல் வாரடித்துக்கொண்டு வந்த மணல் ஐம்பதடி உயரம் ஏறுண்டிருக்கிறது. அதன் மேல் கம்பேக் குடா, குற்சிலுள்ள இறன் பக்கங்களால் வரும் மேல் காற்று இருநூறடி உயரத்துக்கு மணலை ஏறிடச் செய்திருக்கின்றது."[3]

தொன்று தொட்டுத் தமிழ் நாட்டில் வழங்கி வரும் புராண, கன்ன பரம்பரை வரலாறுகளும் ஆதி மக்கள் தமிழ் நாட்டில் வாழ்ந்து பெருகியவர்கள் என்பனவாகும், இதனை கி. பி. 12-ம் நூற்றுண்டின் முற்பகுதியில் கலிங்கத்துப்பரணி பாடிய சயங் கொண்டார் என்னும் புலவர் தமிழ் வேந்தரின் அரச பரம்பரையைக் கூறுமிடத்து,

> "ஆதி மாலமல நாபிக் கமலத்தனுதித்
> தவன் மரீசியெனு மண்ணலை யளித்த பரிசும்
> காதல் கூர்தரு மரீசி மகனுகி வருமகன்
> காசிபன் கதிருக்கனை யளித்த பரிசும்
> அவ் வருக்கன் மகனுகி மனு மேதினி புரந்
> தரிய காதலனை யாவினது கன்று நிகரென்
> றெவ்வருக்கமும் வியப்ப முறைசெய்த பரிசும்"

எனக் கூறியிருத்தல் காண்க.

---

3. T. C. Brown quoted in Stone age in India.

இந்திய நாட்டில் பழமைக்குப் பழமையாய் வாழ்ந்து வரும் மக்கள் இந்து சமுத்திரத்தில் மூழ்கிப் போன நிலப்பரப்பிலும் அதன் தொடர்பாக விளங்கிய **இந்தியாவிலும் தோன்மையே வாழ்ந்த மக்களென்பதுவே உண்மை.** மகன்யோதரோ எழுத்துக் கலையும் மொழியையும் ஒத்தன கிழக்குத் தீவுகளின் மக்களிடையே காணப்படுதலே இதற்குப் போதிய சான்று. கடல்கோட் காலத்து அம் மக்கள் அத் தீவுகளில் தனித்து விடப்பட்டவர்கள் ஆவர். மேலும் இந்நூலிற் கூறப்படும் பொருள்கள் இக்கொள் கையினை மேலும் மேலும் வலியுறுத்துவன.

---

# இயல்—II

## தமிழரின் கிளையினர்

சரித்திரகாரர் எல்லாரையும் பிரமிக்கச் செய்த பழைய நாகரிகமுடைய தேசங்கள் சுமேரியா, எகிப்து என்பன. சுமேரியரின் நாகரிகம் முந்தியதென்று சிலரும், எகிப்தியரின் நாகரிகம் முந்தியதென வேறு சிலரும் கூறுவர். ஒரே காலத்தில் (கி.மு. 4000) இவ்விரு சாதியினரும் நாகரிகத்தின் உச்ச நிலையில் இருந்தமை அறியப்படுகின்றது. இவ் விருசாதியினரும் இந்திய நாட்டினின்றும் சென்று சுமேரியா, எகிப்து என்னும் நாடுகளிற் குடியேறிய மக்கள் என்பதற்குரிய ஆதாரங்கள் நிறையக் கிடைக் கின்றன.

## சுமேரியர்

உடற் கூற்றனும் மொழியாலும் நாகரிகத்தாலும் சுமேரியர் பண்டைத் தமிழ் மக்களை ஒத்தவர்கள் என்று மேல் நாட்டுச் சரித்திர ஆராய்ச்சி வல்லார் நன்கு நிறுவியிருக்கின்றனர்.

**கோவன்** என்னும் ஆசிரியர் கூறியிருப்பது வருமாறு. [1] திராவிடர் யூபிராதஸ் தைகிரசு. பள்ளத்தாக்குகளில் வாழ்ந்த சுமேரியருக்கு நாகரிகமுறையிலாவது ஒத்தவர்களா யிருந்தார்களென்பது இருக்கக்கூடியது. இதற்கு ஆதாரம் அண்மையில் சிந்துநதிப் பள்ளத்தாக்குகளிலுள்ள ஹரப்பா மகன்யோதரோ என்னும் இடங்களிற் கிடைத்த புதைபொருள்களே. மலையாளக் கரைக்கும், பரசீக வளைகுடாவைச் சுற்றியிருந்த மக்களுக்கு மிடையில் மும்முரமாக வியாபாரம் நடந்ததெனத் தெரிகின்றது. இது கிரேக்கர் காலம்வரையில் நடைபெற்றது. திராவிடர் அக்காலத்தில் நாகரிகத்தின் உச்சநிலையை எய்தியிருந்தனர். அவர்கள் இஞ்ஞான்று தமிழர் எனப்படுவர். இப்பொழுது பஞ்சாப்பில் நடத்திய புதைபொருள் ஆராய்ச்சியில் கிடைத்தவை, வண்ணம் பூசிய மட்பாண்டங்கள், நாணயங்கள், உலகமுழுமையிலும் கிடைத்தவற்றுள் பழமையுடைய சொக்கட்டான் காய்கள், சொக்கட்டான் ஆடும் பலகைகள், எழுத்துப் பொறித்த முத்திரைகள் முதலியன. இவ்வெழுத்துக்கள் வாசிக்கப்படாவிட்டாலும் அவை சுமேரிய முத்திரைகளை ஒத்திருக்கின்றன. சேஸ் (Sayes)

1. A History of Indian Literature pp.30 and 38—Herbert H. Gowen D.D.

டிமார்கன் (Demorgan) என்போர் சூசா (சுமெரிய தலைநகர்) என்னுமிடத்தில் கண்டெடுத்த பொருள்களோடு இவைகளை ஒப்பிட்டு இரண்டும் ஒரே வகையினவாயிருத்தலைக் காண்பித்தனர். இது கிஸ் (Kish) சூசா என்னும் இரண்டு இடங்களுக்கும் இந்தியாவுக்குமிடையில் நெருங்கிய தொடர் பிருந்ததென்பதை வலியுறுத்தும். ஒருபோது சூசா சுமருக்கும் இந்தியாவுக்கும் வியாபார மத்திய இடமாயிருந்திருக்கலாம். எல்லாச் சம்பவங்களும் ஒருவரிடமிருந்து ஒருவர் நாகரிகத்துறைக் குரியவற்றை இரவல் வாங்கினார்கள் என்பதைத் தெளிவாக்குகின்றன. இது கி.மு. 3000 வரையில் செல்கின்றது. இரு சாதியார்களுக்குமுள்ள சாதித்தொடர்பு, அராபியக்குடா நாட்டைச் சுற்றிப் பரசீகக் குடாக்கடல் வழியாகக் கடல்வழியாகவும், அப்கானஸ்துக் கூடாகத் தரைவழியாகவும் இருந்திருத்தல் கூடும். இதுவுமன்றி இந்திய பெயராகிய சிந்து (லினன் ஆடை) மேல்நாட்டாருடைய மொழியில் மிக்க பழங்காலத்திலேயே காணப்படுகின்றது. கி. மு. 400-ல் ஆர்மேனிய மொழியில் எழுதப்பட்ட சாசனமொன்றில் இது காணப்படலாயிற்று''

[1]ஹண்டர் என்னும் ஆசிரியர் கூறுவது வருமாறு:

"சிந்துவெளி நாகரிகம் கிஸ், ஊர் என்னும் இடங்களோடு சம்பந்தப்பட்டது. இது ஆபிரகாம் காலத்திற்கு ஆயிரம் ஆண்டுகள் முந்தியது. இங்கு கிடைத்த ஆயிரத்துக்கு மேற்பட்ட முத்திரை

1. Riddles of Mohenyo Daro.—R. C. Hunter New—Review—p. 314-1936.

களில் பாதிக்கு மேற்பட்டவை சேர்யோன் மார்சல் என்பவரால் வெளியிடப்பட்டுள்ளன. கிரேத்தா சுமெரியா, எகிப்து, மகன்யோதரோ கிழக்குத் தீவு களின் எழுத்துக்கள் ஒரேவகையாகக் காணப் படுகின்றன. மகன்யோதரோ எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட மட்பாண்டங்கள் ஹைதரபாத்து முதல் சென்னைவரையிலுள்ள சரித்திர காலத்திற்கு முற்பட்ட கற் சமாதிகளுட் காணப்பட்டன"

சுமேரியரும் தமிழரும் தீர்மானமாக ஒரு இனத் தைச் சேர்ந்தவர்கள் என ஹால் என்னும் ஆசிரியர் துணிவாகக் கூறியிருக்கின்று[1] வாசிக்கப் படா திருந்த மகன் யோதரோ எழுத்துக்கள் சில *ஹெரஸ் பாதிரியாரால் வாசிக்கப்பட்டன. இவ் வெழுத்துகளை வாசிப்பதற் குதவியாயிருந்தன சுமேரிய எழுத்துக் களே. ஹெரஸ் பாதிரியாரால் வாசிக்கப்பட்ட சொற் கள் இன்னும் தமிழ்நாட்டில் வழங்கும் தமிழ்ச் சொற்களாகவே காணப்படுகின்றன. சுமேரிய மொழி யும் தமிழ்போன்ற ஒட்டுச் சொற்களுடையது என்று சரித்திர காரர் கூறியுள்ளார்கள்.மொழியாலும் உடற்கூறுலும், நாகரிகத்தாலும் தமிழரும் சுமேரி யரும் ஒத்தவர்களாகக் காணப்படின் தமிழரே சுமேரியர், சுமேரியரே தமிழர் எனக் கூறுவதில் இழுக் குண்டோ?

சுமேரியர் கிழக்கில் இருந்து சென்று யூபிராதஸ் தைகிரஸ் ஆற்றோரங்களில் குடியேறியவர்கள் எனப் படுகின்றனர்.செமத்தியம் அல்லாத மொழியை வழங்

---

**1.** Ancient History of The Near East R.H. Hall p. 171.
*Far. Heras.

கிய சுமேரியரை ஒத்தமக்கள் இந்தியாவிலன்றி வேறெங்குமிலர். ஆகவே சுமேரியர் இந்தியாவி னின்றும் சென்றவர்கள் என்பது ஐயம் அறப் புலப் படுகின்றது. இவர்கள் இந்தியாவின் எப்பகுதியி னின்றும் சென்றார்கள் என்பது ஆராயத்தக்கது,

### எல்லம்

எல் என்பது சூரியனையும் இலங்குதலையும் குறிப்பதோர் தமிழ்ச் சொல் 'எல்லே இலக்கம்' என்பது தொல்காப்பியச் சூத்திரம். அரேபியா பபிலோன் சின்ன ஆசியா முதலிய இடங்களிலே எல் சம்பந்தமான இடப் பெயர்களை நூற்றுக் கணக்கிற் காணலாம். அந்நாட்டுப் பழைய அரசரும் மக்களும் தம் பெயர்களோடு எல் அல்லது எல்லின் திரிபாகிய பகல் (Baal) வேல் (Bel) முதலியவைகளைச் சேர்த்து வழங்குவது வழக்காயிருந்தது. இவ் வகைப் பெயர்கள் பலவற்றை விவிலிய நூலிற் காணலாகும்.

எல்லம் என்னும் பெயர் சூரிய வழிபாடு காரண மாகத் தோன்றிய பெயர். இப பெயர் புதிதாக இப் பரசீக நாட்டுக்கு வந்த மக்களால் இடப்பட்டது. புதிதாக வந்த மக்கள் சூரிய வழிபாட்டிற்குரிய ஒரு நாட்டிலிருந்து வந்தாராதல் வேண்டும். ஒரு நாட்டி னின்றும் வெளியேறிப் புதிதாக ஒரு தேசத்திற்றங்கி வாழும் மக்கள் தம் தாய் நாட்டின இடப்பெயர்கள் சிலவற்றைத் தாம் உறையும் நாட்டிலுள்ள இடங் களுக்கு இட்டு வழங்குதல் இயல்பு. இத்தன்மை பற்றியே எல்லம் என்னும் பெயர் எழுந்தது எனக் கருத இடமுண்டு.

அப்படியாயின் இம்மக்கள் எங்கு நின்றும் வெளியேறினார்கள்? இம் மக்களோடு நெருங்கிய தொடர்புடைய மக்கள் யாவர்? என்பன ஆராயத் தக்கன.

கிழக்கில் இந்தியாவின் தென்கோடியில் இலங்கை[1] என்னும் தீவுள்ளது. இது மிகப புராதன சரித்திரப் பெருமை வாய்ந்தது. இங்கு சலப்பிரளயத்திற்கு முன், காசிபரின் புதல்வர்களாகிய சூரன் தாரகன் என்னும் அசுரர் ஆட்சி புரிந்தார்களெனக் கந்த புராணங் கூறும். அதன் பின் குபேரன் மாலியவான் முதலிய பலர் இலங்கையை ஆண்டனர். பின்பு இராமாயணத்தில் சொல்லப்படும் இராக்கதர் தலைவன் அத்தீவை ஆண்டான். வான்மீகர் இத்தீவின் வளத்தைப்பற்றி மிகப் புகழ்ந்திருக்கின்றார். மகன்யோதரோவில் காணப்பட்டது போன்ற சில எழுத்துகள் இலங்கையிலுள்ள மலை ஒன்றில் செதுக்கப்பட்டிருப்பதை *ஹேரஸ் பாதிரியார் குறிப்பிட்டுள்ளார். இத்தீவிலே சூரியனுடைய ஒளி காலுகின்ற ஒரு மலை உண்டு. அதனைத் தரிசிப்பதற்கு உலகின் பல பாகங்களிலிருந்து யாத்திரிகர்கள் வருவது வழக்கம். மார்க்கப் போலோ என்னும் இத்தாலியனும் இம்மலையைத் தரிசித்துச் சென்றான். இம்மலை தத்தம் சமயக் கடவுளுக்குரியதென ஒவ்வொரு மதத்தினரும் கூறுவர். சீனர் அது தமது

---

1. எல்லம் சுமெரியாவிலுள்ள இடத்திற்கும் மலைக்கும் பெயர். இலங்கை என்னும் சொல் அடி எல். இலங்கைக்கு ஈழமென்பது மற்றொரு பெயர். ஈழம் என்பதன் அடியும் எல். * Fr. Heras.

வோ என்னும் கடவுளுக்கு உரியதெனக் கூறுவர், மகமதியர் அது ஆதாம் ஏவாள் என்னும் ஆதித்தாய் தந்தையர் உறைந்தவிட மென்பர். சிவமதத்தினர் அதுதம் தெய்வத்துக் குரியதென்பர். புத்தமததகினர் அது புத்த பகவானின் பாதச் சுவடுடைய பரிசுத்த மலை என்பர். அராபியர் அதற்கு ஆதம்மலை எனப் பெயரிட்டனர். ஆதிமக்கள் இங்குதான் தோன்றி யிருத்தல் வேண்டுமென்பது அவர்கள் கொள்கை. சாவகதேசத்தில் காணப்பட்ட பழைய நூல் ஒன்றில் இலங்கையில் ஆதிமக்கள் தோன்றி சாவகம் முதலிய நாடுகளிற் குடியேறிப் பெருகினார்கள் எனக் குறிக் கப்பட்டிருக்கின்றது.

இவ்வாறு சரித்திரப் பெருமைவாய்ந்த இலங் கைத்தீவு ஈழம் எனவும் வழங்கும். ஈழம் என்னும் பெயர் எல் என்பதன் திரிபு. எல் என்பதன் பொருள் கொடுக்கும் பெயரே இலங்கை என்பதாகும். எல், எல்லமாய்ப் பின் எல்லம் ஈழமாகத்திரிந்தது. ஒரு தேசப் பெயரினால் மக்கட் பெயரும் மக்கட்பெயரினால் மொழிப்பெயரும் அறியப்படு தல் மரபு. இலங்கை மக்களின் பழைய மொழி எலு என இன்றும் அறியப்படுகின்றது. எல் தேசத்தின் மொழியாதலின் அதற்கு எலு என்னும் பெயர் உண் டாயிற்று என்று எளிதில் அறியலாகும்.

மேற்கில் ஓர் எல்லம் இருப்பது போலவே கிழக் கிலும் ஓர் எல்லம் இருப்பதை அறிகின்றோம். புரா ணக் கதைகளாலும் இதிகாசங்களாலும் அது மிகப் புராதனமானதீவு என்றும் அறிகின்றோம். சுமேரிய எல்லத்திற் குடியேறிய மக்கள் சூழல்

களில் காணப்பட்ட செமத்திய ஹமித்திய சாதியின ரல்லாத ஒரு தனிவகுப்பினராகக் காணப்பட்டன ரென்றும் அம்மக்களின் மண்டையோடு மொழி ஆதியன திராவிடமக்களுடையன போல விருக்கின் றன என்றும் சரித்திரகாரர் புகல்கின்றனர். அவ்வாரு யின் இவர்கள் கிழக்கிலுள்ள எல்லந்தினின்றும் சென்றவர்களே யாவர். கிழக்கிலுள்ள எல்லந்தில் வாழ்ந்த மக்கள் சூரியனை வழிபடுவோராயு மிருந்த னர். பழைய இலங்கைச் சிற்பங்களில் காணப்படும் இலங்கை அரசர், முகத்தை மழித்துச் சுமேரிய அரசரைப்போலத் தலையில் குடுமி வைத்தவர்களாகக் காட்சி அளிக்கின்றனர்.

பல்லாற்ருன் ஆராயுமிடத்துச் சுமேரியர் பழைய இலங்கைமக்களின் ஒரு பிரிவினராகவே காணப் படுகின்றனர்.

### சுமேரியரின் யுத்த முறை முதலியன

சுமேரிய மக்களின் சில பழக்க வழக்கங்களைப் பற்றிக் கிட்டிய கிழக்குத் தேசங்களின் பழைய வரலாறு என்னும் நூலிற் கூறியிருப்பது வருமாறு[1] :

"சித்திரங்களிற் காணுகிறபடி, சுமேரியரின் கழுதை பூட்டப்பட்ட தேர்கள் படையின் முன்னணி யிற் சென்றன. வீரர் இறந்தவர்களின் உடலை மிதித் துக்கொண்டு முன்னேறிச் சென்றனர். வீரர் அரை யைச் சுற்றித் தோல் உடையை உடுத்திருந்தனர்; உலோகத்திஞற் செய்த தலைக்கவசம் பூண்டிருந்தனர். வீரர்கள் முகத்தை மழித்திருந்தார்கள். அவர்களின் கொண்டை மயிர் தலைக்கவசத்துக்கு வெளியே தெரி

---

1. A. H. O. T. N. East pp. 180, 181—R. H. Hall.

கின்றது. யுத்தத்தில் வில்லும் அம்பும் உபயோகிக்கப் பட்டதை அறிய முடியவில்லை. யுத்தம் என்பது இரு படைகளும் ஒன்றை ஒன்று முட்டித் தள்ளிப் பொருதுவதாயிருந்தது. அதிகம் படையுடைய பக்கத்துக்கு அல்லது முன்னேறும் கட்சிக்கு வெற்றி உரியதாயிருந்தது. உடம்பை நன்றாகக் காக்கும் கவசம் அணிந்த வீரர் நிரைக்கு அறுவராய் நின்று முன்னணியில் பொருதினார்கள். அவர்கள் நீண்ட சதுரமான பரிசைகளையும் கண்ட கோடரிகளையும் தாங்கி நின்றனர். பரிசைகள் அவர்கள் காலை மறைக் கக்கூடிய அளவுக்கு நீண்டிருந்தன. இவை பின்னணி யில் நிற்பவர்களைச் சுவர் காப்பதுபோலக் காக்கின் றன. மற்றவர்களிடத்திற் பரிசைகள் இல்லை. ஆனால் அவர்கள் தங்கள் ஈட்டிகளை உபயோகிக்கத் தக்கதா கவிருந்தது. ஒரு முன்னணிப்படை மற்றப் படையைத் தாக்கிப் பின்னிடச்செய்ய முயன்றது. வென்றவர்கள் தம் கேடகங்களை எறிந்துவிட்டுத் தோற்றவர்களைத் துரத்திச் சென்றார்கள். சுமேரிய குருமார் கோயிற் கிரியைகளை நிர்வாணமாக நின்று புரிந்தார்கள்.[1] [2]அவர்கள் 'சப்பாணி' கட்டிக்கொண்டிருந்து உண்டார் கள். வீடுகள் இரண்டு அல்லது மூன்று மாடிகளும்

---

1. The representation of Summons usually show them with shaven heads. Are the shaven people really all priests? The great men were often priests and so would be represented with shaven beads. The priests represented performing religious rites stark-naked according to Sumerian customs which the Semitics did not follow. T.A.H.O.T.N.E. p. 172—R. H. Hall.

2. Quest and Conquest.—Malcolm Burr.

பல அறைகளும் கூடங்களும் தலை வாயில்களும் உடையனவாய் செங்கல்லாற் கட்டப்பட்டிருந்தன. மண் தகளியில் எண்ணெ யூற்றித்திரி யிட்டு எரிக்கும் விளக்குகள் உபயோகிக்கப்பட்டன. நித்திரை செய்வதற்கு அழகிய மரக்கட்டில்கள் உபயோகத்திலிருந்தன. உணவருந்த மண் தட்டுகள் வறியவர்களால் உபயோகிக்கப்பட்டன; செல்வர், செம்பு, வெள்ளி, பொன் தட்டுகளை உபயோகித்தனர். மட்கலன் என்னும் சுமேரிய அரசன் கள்வர் ஓட்டிச் சென்ற பசுக்களை மீட்டுப் பகைவரைப் புறங்கண்டான். அவனுக்குக் கல் நாட்டப்பட்டிருக்கும் முத்திரைகள் சுமேரியாவிலும் சிந்து நதிப்பள்ளத் தாக்கிலும் கிடைத்தன. கல்நாட்டும் வழக்கு பழந்தமிழரது வழக்கமென்பது தொல்காப்பியத்திற் கண்டது.[1]

## எகிப்தியர்

எகிப்தியரது நாகரிகம் சுமேரியரது நாகரிகத்தைப்போல மிகப் பேர்போனது. இவர்கள் 'பண்டு' (Punt) தேசத்தினின்றும் செங்கடல் மார்க்கமாக வந்து நீலாற்றங்கரையிற் குடியேறியவர்கள்". மக்கட் குலங்களை வேறுபந்தி அறியும் சாத்திரப்புலமை மிக்க ஹக்ஸ்லி என்னும் ஆசிரியர் திராவிடமக்களும் எகிப்தி

---

1. The Makers of Civilization pp. 109, 164. L. A. Waddell.

2. Historians History of the world Vol. 1. p. 71. There was among the Egyptians a, vague and ancient tradition that they originally came from the land of Punt, and that it had been their home before they invaded and conquered the lower valley of Nile—The ancient history of the Near East —P. 92 R. H. Hall.

யரும் ஒரே குலத்தைச் சேர்ந்தவர்கள் எனக்கூறியிருக்கின்றார்[1], மோசேசகாலம் (கி. மு. 1500) தொட்டு மேற்குத் தேசத்தவர்கள் ஒபிர் (Ophir) என்னும் தேசத்தைப்பற்றி அறிந்திருந்தார்கள், ஒபிர் என்னும் இடம் பண்டு நாட்டில் உள்ளதெனக் கருதப்பட்டது.[2]

---

1. " Wilfred Scawen Blunt says that Huxley'had longly suspected a common origin of Egyptians and the Dravidians of India, perhaps a long belt of brown skinned men from India to Spain in very early days. " Outline of History P. 79 H G. wells.'

" One of the most interesting problems at present is the relation of the Pre-semitic population of Babylon to the Dravidians, on one hand, and the old Egyption on the other. Only one point appears to me to be quite clear if the statues of Tell-loh represent these people.—Man's Place In Nature And other Essays—P. 233—Thomas Huxley.

இருக்கு வேத இந்தியா எழுதிய அபினஸ் சந்திர தாஸ். தெல் தோ'வி லுள்ள சிற்பங்களின முக ரேகை தமிழர்களது போலவே அமைந்திருக்கின்றது எனக் குறிப்பிட்டுள்ளார்— இருக்கு வேத இந்தியா—பக். 207.

2 " Punt has always been remarked and it has often been assumed that Ophir was Punt, and it is therefore to be sought on the African Somali coast. Among the products of Ophir however, there are certain things mentioned, such as the apes and the peacocks, for instance, which are certainiy Indian; so that it is quite probable that Opir is really the Konkan on Cochin Coast, and that Solomons. Phœnecian sailors reached India. A.H.O.T.N.E. P. 424.

" The voyage to Ophir, we are told occupied three years.thither and homeward, and the cargo consisted of gold, ivory, apes peacock and ' almug ' wood (1 Kings IX26

மேல் நாட்டுச் சரித்திரகாரர் ஓபிர், பண்டு, என்னும் இடங்கள் ஆபிரிக்கக் கரையிலுள்ள இடங்கள் எனக் கருதினர்கள். சரித்திர அறிவு விசாலமடைந்த இக்காலச் சரித்திராசிரியர்கள் ஓபிர், பண்டு என்னும் இடங்கள் இந்தியாவிலே மலேயாளக் கரையில் உள்ள இடங்கள் எனக் காரணங்காட்டித் தாபித்திருக்கின்றனர். 'என்சைகிளோபீடியா பிரித்தானிக்கா' என்னும் கலேப் பேரகராதியில் பூமி சாத்திரம் என்னும் தலேப்பின்கீழ் கூறப்பட்டிருப்பதன் சுருக்கம் வருமாறு: "ஓபிர் என்னும் இடம் மலேயாளக் கரையில் உள்ளது. இங்கிருந்து மேல்நாடுகளுக்குச் சென்ற பொருள்கள் இந்தியாவில் கிடைப்பனவாயிருக்கின்றன. அப்பொருள்களைக் குறிக்க வழங்கும் பெயர்கள் எபிரேய மொழியிற் காணப் படுகின்றன. அப்பெயர்கள் இன்றும் இந்தியாவில் வழங்குகின்றன. எபிரேய மொழியில் அச்சொற்களுக்குச் சொல்மூலங்கள் கிடையா. ஆகவே ஓபிர் மலேயாளக் கரையிலுள்ள இடமேயாகும்."

அபினஸ் சந்திரதாஸ் என்பவர் தமது இருக்கு வேத இந்தியா என்னும் நூலில் பண்டு என்பது மலேயாளக் கரையேயாம் என்று பலவாறு ஆராய்ந்து முடிவு செய்திருக்கின்ருர். பண்டிதர் சவரி

---

and XII). The following lead to conclusions that Ophir was the Malabar coast of India. In the Hebrew the words for apes is koph (without any Etymology in Semitic tongues; in Sanskrit kafi. Ivory in Hebrew is sben-habbim; in Sanskrit ibha is an elephant. Peacocks in Hebrew. Tokki from togei the word still nsed in Malabar Coast—Geography—Encyclopædia Britannica."

ராயன் அவர்கள் தமிழ்ப் புராதன கலைஞன்[1] என்னும் நூலிற் கூறியுள்ளது வருமாறு !

"[1]இராணியால் ஆளப்பட்ட பண்டு என்னும் தேசத்தோடு ஆரம்பத்தில் வியாபாரத் தொடர்பு வைத்தவள் கத்தாசு என்னும் எகிப்திய அரசி. இப் பண்டு நாடாகிய பரிசுத்த பூமியினின்றும் அவள் அமன் (Amon) வணக்கத்தைப்பெற்றாள் என்று சொல்லப்படுகின்றது. இந்நாட்டைப்பற்றி விவரிக்கு மிடத்துத் தெங்கின் ஓலைகள் குடிசைகளை மறைத்துத் தொங்கும் எனக் கூறப்பட்டுள்ளது. பண்டு, தெற்கு அராபியா எனக் குறிப்பிடப் படுகின்றது. கத்தாசுவின் சாசன எழுத்துகளிற் காணப்பட்ட பண்டங்களிற் பல அரேபியாவிற் கிடைக்காதன. தென்னஞ்சோலை செறிந்த நாடென்றது தீர்மானமாகத் தென்னிந்தியாவையே. அக்காலத்தில் எகிப்து பபிலோன் அரேபியா சின்ன ஆசியா முதலிய நாடுகளோடு இந்தியா மூச்சான வியாபாரம் நடத்திக்கொண் டிருந்தது. ஆதலின் பண்டு என்பது ஆபிரிக்காவின் ஒரு இடமாயிருத்தல் முடியாது. அது தென்னிந்தியா என்பது நிச்சயம். மயூர சந்திரகுப்தன் காலத்தில் பாடலிபுரத்தி லிருந்த மெகஸ்தினிஸ் என்னும் கிரேக்கர் இந்தியாவைப் பற்றிக் கூறுமிடத்து, 'அடுத்தது பெண்களால் மாத்திரம்ஆளப்படும் பாண்டிய சாதி.ஹொர்குலிசுஎன்பவருக்கு ஒரே பெண் மகவுஇருந்தமையாலும் அதில் அவர் அளவிறந்த அன்பு வைத்தமையாலும் அவர் அதற்கு ஒரு நல்ல இராச்சியத்தைக் கொடுத்தார்"

---

1. Tamilian Antiquary N.O.I. p. 35.

மலையாள அரசுரிமை இன்றைக்கும் பெண்வழியையே சாருகின்றது. அரசிக்குப் பதில் அவள் உடன் பிறந்தான் ஆட்சி நடத்துகிறன். அரசி எனப் படுவோள் அரசனின் உடன்பிறந்தாளே. மருமக்கட்டாயம் என்னும் வழக்கும் அங்குதானுண்டு. மருமக்கட்டாய முடையோர் தங்கள் அம்மான் பெயரைத் தந்தை பெயருக்குப் பதில் இட்டு வழங்குவர். மலையாளம் பெண்கள் அதிகாரத்துக் குட்பட்டிருந்தமையால் அதற்கு நாரிசேரம் என்பதும் மற்றொரு பெயர். குமரிநாடு எனத் தமிழ் நாட்டுக்குப் பெயர் வந்ததும் இக் காரணம்பற்றிப் போலும்.

எகிப்திலும் பெண்களுக்கே ஆடவரிலும் மிக்க அதிகாரம் இருந்தது. கணவன் 'ஆடவன்' என்றும் மனைவி 'இலலாள்' என்றும் வழங்கப்படுவர். ஆடவர் தம் வழிமுறையைத் தாய்வழியிலிருந்து குறிப்பிடுவர்.'[1]

[2]எகிப்தியர் மலையாளக் கரையிலிருந்து சென்றோர்கள் என்று கூறப்படுவதற்கு இது நல்ல சான்றாதல் காண்க.

---

1 In the ancient sumerean laws quoted above it will be noticed that the man is more important than woman, the father than the mother, the husband than the wife. This is a striking contrast to Egypt, where the "lady of the house" was usually more an important personage than the mere 'male' as the husband was called and where men often preferably traced their descent in the female line. T.A.H.O.T.N. East—p. 205—Hall.

2 Rigvedic India p. 250 Abinas Chundra Das.

கி. மு. 4000 வரையில் எகிப்தியர் மிகத் திருந்திய சாதியினராகக் காணப்படுகின்றனர். அதற்கு முன் தமது தெய்வங்களுடன் நீலாற்றங்கரையிற் (Nile) சென்று குடியேறத் தகுந்த மக்கள் அரேபியாக்கரையிலோ ஆபிரிக்காக் கரையிலோ இருந்தார்கள் என்று கூறுதற்கில்லை.

எகிப்துக்கும் பண்டுநாட்டுக்குமிடையில் நோவா காலம் வரையில் (கி. மு. 2400) இருந்து கப்பற் பிரயாணங்கள் நடைபெற்ற வரலாறுகள் எகிப்திய சித்திர எழுத்துகளில் பொறிக்கப்பட்டிருக்கின்றன. 'போக்குவரத்தின் அதிசயம்'' என்றும் நூலில் இதைப் பற்றிய வரலாறு மொழிபெயர்த்துக் காட்டப்பட்டிருக்கின்றது. அது வருமாறு: நோவா பேழை கட்டும் காலத்தில் உலகில் முதற்கப்பற் பிரயாணம் நடந்த வரலாறு காணப்படுகின்றது. இது எகிப்திலிருந்து பண்டு நாட்டுக்குச் செய்யப்பட்டதாகும். இதைப்பற்றிய விபரம் கென்றி புறுக்சு என்பவரால் சித்திர எழுத்துகளிலிருந்து மொழிபெயர்த்து வெளியிடப்பட்டது. இப்பிரயாணம் எகிப்திய பரோவாவுக்கு வாசனைத் திரவியங்கள் கொண்டுவருதற்காக ஒழுங்கு செய்யப்பட்டது. இன்னொருமுறை கி. மு. 1600 வரையில் பண்டுதேசத்திற்கு எகிப்தினின்றும் கப்பல்கள் சென்றன. அப்பொழுது Isralites) இஸ்ரவேலர் எகிப்தில் மறியற் படுத்தப்பட்டிருந்தார்கள். அப்பிரயாணத்தைப் பற்றிய முழு விபரமுங் கிடைத்திருக்கின்றது. அது வருமாறு: கப்பலில் பண்டு தேசத்திலுள்ள அதிசயம் விளைக்கும் பொருள்கள் எல்லாம் ஏற்றப்பட்டன. தெய்வத்தன்மை பொருந்

திய அந்நாட்டிலிருந்து ஏற்றப்பட்ட பொருள்கள், வாசனைப் பிசின்கள், புதியவாலனை யுடைய மரங்கள், (Amu)அமு என்னும் தேசத்தார் தந்தத்தில் பொன்ன முத்திச் செய்த(தந்தப்) பொருள்கள், 'கேசித்து'மரம், அகிற் கடடைகள் பரிசுத்த சாம்பிராணி, கண்ணுக் குத் தீட்டும் மை, நாய்த்தலைக் குரங்கு, நீண்டவாற் குரங்கு, வேட்டைநாய்கள், புலித்தோல், அந்நாட்டு மக்களும் குழந்தைகளும்,[1] என்பன

புராதன இந்தியா (Indian Antiquary) என்னும் நூல்கூறுவது ; "தென் இந்தியாவோடு எகிப்து மிகப் பழங்காலந் தொட்டு வாணிபம் நடத்திவந்ததென்பது மென்மேலும் வலியுத்துகின்றது. தென்னிந்திய காட்டுச்சாதியினர் முன்னுளில்ஒலிபனம்(Olibanam) என்று அறியப்பட்ட வாசனைப் பிசினை பிரதானமாகச் சேகரிக்கிறுர்கள்."[2]

கெரதோதசு (Herodotus) என்பவர் கி. மு. 500 வரையிலிருந்த கிரேக்க ஆசிரியர். இவர் அக்காலங்களில் எகிப்து பபிலோன் முதலிய தேசங்களுக்குப் பிரயாணஞ் செய்து தான் நேரிற் கண்டவற்றையும் கேட்டவற்றையும் திரட்டிச் சரித்திர மெழுதியிருக்கின்றுர். இவர் சரித்திரப் பிதா எனப்படுவர். இவர் கூறியவற்றில் கற்பனைகள் பல உண்டு எனச் சரித்திரகாரர் கூறுகின்றனர். அவர் கூறியவைகளில் ஓரளவு கழிவு வைத்து உண்மைகளை ஊகித்தறிதல் கூடும். ஆகவே அவர் எகிப்தியரைப் பற்றிக் கூறியிருப்பதன் சுருக்கத்தை ஈண்டு தருகின்றேம்.

1. Wonders of Trasport pp. 61-62.
2. Indian antiquary VII p. 278 quoted in Prehistoric India.

"மற்றத் தேசங்களில் காணப்படாத அதி சயங்கள் இங்கு உண்டு. ஆடவர் இருந்துகொண்டும் பெண்கள் நின்றுகொண்டும் சிறு நீர் கழிப்பர். பெண்கள் வியாபாரம் புரிய ஆடவர் வீட்டிலிருந்து நெசவு செய்வார்கள். ஆடவர் சுமையைத் தலையில் வைத்தும் பெண்கள் தோளில் வைத்தும் செல் கிறார்கள். ஒரு பெண்ணாவது தெய்வத்துக்குப் பணி விடை செய்தல் கூடாது. புதல்வன், தான் விரும் பினால் பெற்றோரை ஆதரிக்கலாம். அவன் அவர்களை ஆதரிக்கக் கடமைப் பட்டவனல்லன்; புதல்வி, தான் விரும்பினால் என்ன விரும்பாவிடில் என்ன அவர்களை ஆதரிக்கக் கடமைப் பட்டவள். மற்றத் தேசங்களில் குருமார் தலைமயிரை நீள வளரவிடுவர். எகிப்திய குருமார் மயிரைக் களைந்து விடுவர். கிட்டிய உற வினர் மரணமடைந்தால் ஆடவர் தலையைச் சிரைத் துக் கொள்வர்; முகத்தில் மயிரை வளர விடுவர். ஒவ்வொரு மனிதனும் இரண்டு உடைகளை அணி கிறான். பெண் ஒரு உடையை மாத்திரம் அணி கிறாள். கிரேக்கர் இடப்பக்க மிருந்து வலப்பக்கம் எழுதுவார்கள். எகிப்தியர் வலமிருந்து இடம் எழுதுவர். அவர்கள் இரண்டு வகையான எழுத்து களை வழங்குவர். ஒன்று சாதாரணமானது; மற்றது பரிசுத்தமானது. எல்லாச் சாதியாரையும் விட இவர்கள் கடவுள் வணக்கத்தில் கருத்துள்ளவர்கள். இவர்கள் தாம் பானம் அருந்தும் கிண்ணங்களைத் தினம் சுத்தஞ் செய்கிறார்கள். இதைச் சிலர் செய்தும் சிலர் செய்யாமலும் விடமாட்டார்கள். எல்லோருஞ் சுத்தஞ் செய்வர். அவர்கள் தோய்த்துலர்ந்த சண

லாடையை உடுப்பர். இதில் அவர்கள் விசேட கவனஞ் செலுத்துகின்றனர். தாம் சுத்தமாக இருக்கும் பொருட்டு அவர்கள் விருத்த சேதனஞ் செய்து கொள்ளுகிறார்கள். பேன்முதலிய அசுத்தங்கள் இராதபடி ஒவ்வொரு குருவும் ஒவ்வொரு மூன்றும் நாளும் உடம்பு முழுவதையும் சவரஞ் செய்து கொள்ளுகின்றார். அவர்கள் சணல் ஆடையை உடுக்கின்றனர்; பைபிலஸ் (Byblus) பாதரட்சையைத் தரிக்கின்றனர். இவர்கள் வேறு வகையான ஆடையும் பாதரட்சையும தரிக்க அனுமதிக்கப்பட மாட்டார்கள். அவர்கள் பகலில் இருமுறையும் இரவில் இருமுறையும் நீராடுகின்றனர். சுருங்கக் கூறில் அவர்கள் அநேக கிரியைகளைச் செய்கிறார்கள். அவர்கள் தம் சொந்தப் பொருளைச் செலவு செய்வதில்லை. அவர்களுக்காகப் பரிசுத்த உணவு சமைககப் படுகின்றது; அவர்கள் மீனை உண்பதில்லை; வாத்து, மாட்டுமாமிசங்களும் திராட்சை இரசமும்கொடுக்கப் படுகின்றன. குருமார் பலர் கடவுளுக்குத் தொண்டு புரிகின்றனர். ஒருவர் தலைமைக் குருவாக இருப்பார். ஒரு குரு மரணமானால் அவர் புதல்வன் அவரது இடத்திற்கு வருவான். எபாபஸ் என்னும் தெய்வத்துக்கு பரிசுத்தமான வெள்ளை எருது பலியிடப் படுகிறது. விரதமிருந்த பின்பே அவர்கள் பலியிடுகிறார்கள். பலியிட்ட மிருகத்தின் கால்களை வெட்டி விடுகிறார்கள். பின்பு குடலை வெளியே எடுத்து விட்டு வயிற்றினுள் அப்பம் தேன் பழவற்றல் அத்திப்பழம், வாசனைத்திரவியம் முதலியவற்றை நிரப்பித் தீயில் எண்ணெயூற்றி எரிப்பார்கள்; வெந்த இறைச்சியை

எல்லோரும் உண்பார்கள். பசுக்கன்றுகளை அவர்கள் பலியிடமாட்டார்கள்.

பதினேழாயிரம் வருடங்களுக்கு முன் அம்மாசிசு (Amasis) என்னும் மன்னனின் ஆட்சியில் முன் எட்டாயிருந்த தெய்வங்கள் பன்னிரண்டாக்கப் பட்டன.[1] அப்பொழுது அதிகரிக்கப்பட்ட தெய்வங்களுள் *கெக்குலிஸ் ஒருவராவர். இதைப்பற்றி அறிவதற்கு யான் பொனிசியாவுக்குச் சென்றேன். கெக்குலிஸ் ஆலயத்தில் இரண்டு தூண்கள் இருந்தன. அவற்றுள் ஒன்று பொன்னாலும் மற்றது மரகதத்தினாலும் செய்யப்பட்டிருந்தன. †தையர்ப்பட்டினங் கட்டப்பட்டபோது அவ்வாலயங் கட்டப்பட்டதென்றும் தையர்பட்டினம் இரண்டாயிரத்து முந்நூறு வருடங்களுக்கு முன் கட்டப்பட்டதென்றும் அங்குள்ளோர் கூறினார்கள். எகிப்தியர் பன்றியை மிக அசுத்தமான மிருகமாகக் கருதுகிறார்கள். அது ஒருவனுடைய உடையில் முட்டினாலும் அவன் ஆற்றில்விழுந்து முழுகுகிறான். பன்றிவளர்ப்போர் ஆலயத்துள் நுழைய அனுமதிக்கப்படுவதில்லை.

கிரேக்கரைப் போலவே எகிப்தியர் இலிங்க விழாக் கொண்டாடுகின்றனர்; ஆனால் இலிங்கத்துக்குப் பதில் ஒரு முழ உயர விக்கிரகங்களைச் செய்து

1. மகஞ்சோதரோவில் ஆரம்பத்தில் எட்டு மாதங்கள் இருந்தன என்றும் ஒவ்வொரு மாதத்துக்கும் ஒவ்வொரு தெய்வம் உரியதாக்கப்பட்டிருந்ததென்றும் அறிகிறோம். அப்படியே எகிப்திலும் ஒருகாலத்தில் எட்டுத் தெய்வங்கள் இருந்தன எனப்படுதலின் அக்காலத்தில் எட்டு மாதங்களே இருந்தனவாகலாம். இது மகன்யோதரோ ஆராய்ச்சியில் ஹெரஸ் பாதிரியார் கூறியதோடு ஒத்து நிற்கின்றது.

* Hercules † Tyre.

வைத்திருந்தனர். விக்கிரகத்தைப் பெண்கள் கிராமங் களுக்குத் தூக்கிச் செல்கிறார்கள்; அவர்களுக்குப் பின்னால் குழல்கள் ஊதப்படுகின்றன. இத் தெய்வத் துக்கு பக்கஸ் (Baccus) என்று பெயர். மெலாம்பஸ் என்பவர் பாக்கஸ் அல்லது இலிங்க வழிபாட்டை கிரேக்கதேசத்தில் ஆரம்பித்துவைத்தார்.

ஹெசியட், ஹோமர் (Hesiod and Homer) என் போர் எனது காலத்துக்கு 400 வருடங்களின் முன் இருந்தார்கள்.

வருடத்தில் ஒரு குறிக்கப்பட்ட நாளில் அவர்கள் வீட் டைச் சுற்றி வெளியே அநேக விளக்குகளைக் கொளுத்து கிறார்கள். தட்டையான சிறு சட்டிகளில் உப்பைக் கொட்டி எண்ணெய் ஊற்றித் திரிகள் கொளுத்தப் பட்டனவே அவ் விளக்குகளாகும், விளக்குகள் இரவு முழுதும் எரியும், அத்திருவிழா தீபங்கொளுத்தும் திருவிழா எனப்படும். இவ்விழா எகிப்து முழுமை யிலும் கொண்டாடப் படுகின்றது. கோயிலுக்கு நேர்த்தி செய்பவர்கள் தங்கள் பிள்ளைகளை ஆலயத்துக்கு கொண்டு சென்று அவர்களின் தலைமயிரைக் களைகிறார்கள்; மயிரைத் தராசிலிட்டு அதற்குச் சமமான வெள்ளிக் காசைக் கோயில் மிருகங்களைப் பராமரிப்பவர்க ளிடம் கொடுக்கிறார்கள். பூனை இறந்துவிட்டால் அவர்கள் துக்கங்கொண்டாடுகிறார்கள். ஆமேனியர் முதலையைப் பல்லி என்று கருதி அதற்குக் 'கொறக்க டைல், எனப் பெயரிட்டனர்.

போனிக்சு (Phoenix) எனப் பரிசுத்தமான பட்சி ஒன்று உண்டு. இதனை நான் படத்தில் பார்த்திருக் கிறேன். அது ஐஞ்ஞூறு ஆண்டுகளுக் கொருமுறை

தான் அங்கு வருகின்றதென்று *'கெலியோபொலி' என்னுமிடத்திலுள்ளவர்கள் கூறினார்கள். அதன் தந்தையின் மரணகாலத்தில் அது அங்கு வருகின்றதெனச் சொன்னார்கள். அதன் இறகுகள், ஒரு பகுதி பொன்னிறமும் ஒரு பகுதி சிவப்பு வண்ணமும் உடையன. அதன் வடிவம் கழுகுபோன்றது. அது அரேபியாவிலிருந்து தன் தந்தையின் உடலைச் சூரியன் கோயிலுக்குக் கொண்டுவருகின்றதென்று சொல்லப்படுகின்றது. அது வெள்ளைப் போளத்துக்குள் அவ்வுடலை வைத்து வாயில் கௌவிக்கொண்டு வருகின்றதாம்.

தீப்ஸ் நகரின் அயலிலே பரிசுத்தமான பாம்புகள் இருக்கின்றன. அவை மனிதரைத் தீண்டுவதில்லை. அவை குறுகியனவாய் தலையில் இரண்டு கொம்புகள் உடையனவாயிருக்கும்.[1] இப்பாம்புகள் யூபிதர் தெய்வத்துக்குப் பரிசுத்தமானவை. செட்டைமுளைத்த பாம்புகளைப் பற்றிக் கேள்விப்பட்டு, நான் அவைகளைப் பார்க்க அரேபியாவுக்குச் சென்றேன். அங்கு பாம்புகளும் அவைகளின் என்புகளும் காணப்பட்டன. இளை துளிர்காலத்தில் செட்டைமுளைத்த பாம்புகள் அராபியாவிலிருந்து எகிப்துக்குப் பறந்து செல்கின்றனவாம். ஒருவகைப் பறவை அவைகளை இடைவழியில் எதிர்ப்பட்டுக் கொன்றுவிடுகிறது. இதற்காக இபிஸ் என்னும் பறவை எகிப்தியரால் அதிகம் மரியாதை செய்யப்படுகிறது. இப்பட்சி இருண்ட கறுப்பு நிறமும், நாரையினதுபோன்ற காலும் வளைந்த

---

1. மகன்யோதரோ முத்திரைகளில் கொம்பு முளைத்த பாம்புகள் காணப்படுகின்றன.

* Heliopolis.

சொண்டுமுடையது. பாம்பின் சிறகுகள் இறகுகள் இல்லாத செட்டைகள்போன்றன.

எகிப்தியர் மாதத்தில் மூன்றுநாட்கள் அடுத்துப் பேதி மருந்து சாப்பிடுகிருர்கள். மனிதர் உண்ணும் உணவினுல் வியாதி உண்டாகின்றதென அவர்கள் நினைக்கிருர்கள். விருந்துகளின் முடிவில் இரண்டுமுழ நீளமுள்ள சவப்பெட்டியை அல்லது ஒரு சிறிய சவத்தின் உருவத்தை ஒருவன் எதிரே கொண்டுவந்து எல்லோருக்கும் காட்டுகிருன், அவன் 'இதைப் பார்த்துவிட்டு உண்டு குடித்துக்கொண்டாடுங்கள். இறந்தபின்பு நீங்கள் இதைப்போல இருப்பீர்கள்.' என்று கூறுகிருன். இது பெரும்பாலும் குடிக்கும் களியாட்டங்களிற் செய்யப்படுகின்றது. அவர்கள் பழைய பழக்கவழக்கங்களைக் கொண்டாடுகிருர்கள்; புதியவற்றைக் கொள்வதில்லை.

வாலிபர் வயதின் மூத்தவர்களுக்கு விலகி வழிவிட்டு ஒதுங்கி நிற்பார்கள். அவர்கள் கிட்ட வரும்போது இருக்கும் ஆசனத்தைவிட்டு எழுந்து நிற்பார்கள்; ஒருவரை ஒருவர் வழியில் சந்திக்கநேர்ந்தால் கைகளை முழங்கால் வரையிலும் தொங்கவிட்டு மரியாதை செய்கிருர்கள்.

ஒவ்வொரு மாதமும் நாளும் ஒவ்வொரு தெய்வத்திற்குப் பரிசுத்தமானது. ஒருவன் பிறந்த நாளின்படி அவனுடைய சீவிய காலத்தில் என்ன நிகழுமென அவர்கள் அறிகிருர்கள். அவன் எப்போது இறப்பானென்பதும் எவ்வகையாயிருப்பானென்பதும் கூறப்படுகின்றன.

எகிப்தை ஆண்ட முதல் அரசன் மெம்பிஸ். இவனுக்குப் பின் 330 அரசர் ஆண்டனர். இவர்களின் பெயரையும் குருமாரின் பெயரையும் குருமார் புத்தகத்தில் எழுதிவைத்திருக்கிறார்கள். சூரிய நிழலிலிருந்து நாழிகையை அளத்தல், பகலைப் பன்னிரண்டாகப் பிரித்தல் முதலியவற்றைக் கிரேக்கர் பபிலோனியரிடமிருந்து கற்றார்கள். ஒரு அரசன் தனது வெற்றிப் பிரதாபங்களை ஊர்கள் தோறும் கற்றூண்கள் நிறுத்தி எழுதிவைத்தான். இன்னொரு அரசன் சூரியன் கோயிலில் 100 அடி உயரமுள்ள தனிக்கல்லாலான இரண்டு தூண்களை நிறுத்தி வைத்தான்.

எகிப்திய முதல் அரசன் முதல் ஒவ்வொரு அரசனது விக்கிரகமும், ஒவ்வொரு அரசன் காலத்திற் குருவின் விக்கிரகமும் மரத்தினாற் செய்யப்பட்டிருக்கின்றன. இவை விசாலமான ஒரு கட்டிடத்தில் இருத்தலைக் குருமார் எனக்குக் காட்டினார்கள். 300 தலை முறைகளும் பத்தாயிரம் ஆண்டுகளுக்குச் சரி.

இக்காலத்தில் ஒரே தொகையான அரசரும் பிரதான குருமாரும் இருந்தனர். இவ்வரசர்களுள் மூன்று சந்ததியினர் நூறுநூறு வருடங்களும், 41 சந்ததியினர் ஒவ்வொருவரும் 340 வருடங்களும் வாழ்ந்தனர். இக்காலத்தில் நான்குமுறை சூரியன் வழக்கமான திசையிலிருந்து மாறாக உதித்தது; ஒரு முறை படுகின்ற திசையினின்று உதித்தது; இன்னொரு முறை உதயமாகும் திசையினின்று உதித்தது; ஒரு முறை அது உதயமாகும் திசையில் பட்டது.

எகிப்திய குருமார் புலித்தோலைப் போர்த்துக் கொண்டு கிரியை செய்வனவும்,நடனமாதர் நிர்வாண மாக நின்று நடனம் புரிவனவுமாகிய சித்திரங்களும் காணப்படுகின்றன. இப்பொழுது கெருடபுராணம் என வழங்கும் நூலிற் கூறப்படுவன போன்றனவே அக்கால எகிப்தியமக்களின் இறந்தவர்களைப் பற்றிய கொள்கைகளாகும்.

## பபிலோனியர்

தைகிரஸ் யூபிராதஸ் (Tigris and Euphrates) நதி ஓரங்களின் வடக்கே இருந்தவர்கள் அக்கேடியர் எனப்பட்டனர். அவர் செமத்தியர். சுமேரியர், அவர்களை வென்று அடிப்படுத்தித் தமது நாகரிகத் தையும் கலைகளையும் அவர்களிடையே பரப்பினர். சுமேரியாவும் அக்கேடியாவும் சேர்ந்த நாடு பபிலோனியா எனப்பட்டது. பபிலோனின் முதல் அரசன் கமுரபி (கி. மு. 2003-1961). பபிலோனியரின் நாகரிகம் சுமேரியரின் நாகரிகமே. பபிலோன் முதல் பரசீகம் இந்தியாவரையில் தொடர் பாகத் தமிழ் மக்களே வாழ்ந்தார்களென்பது சரித்திராசிரியர்கள் கூற்று. ஹோல் (Hall) ஆசிரியர் கூறுவது வருமாறு : "பலுச்சிஸ்தானத்தில் பிராகியர் என்னும் திராவிட சாதியினர் காணப்படுகின்றனர்; தெற்குப் பரசீகத்திலும் இவ்வகையான மக்கள் வாழ்கின்றனர். ஆகவே பரசீகத்தில் முன் உறைந்த ஆரியரல்லாத மக்கள் இந்திய மக்களையும் பபிலோனியரையும் இணைத்துக்கொண்டிருந்தார்கள்.

என்பதிற் சந்தேகமில்லை[1]." இவர்களைப் பற்றிக் கெரதோதசு (Herodotus) ஆசிரியர் கூறியிருப்பது வருமாறு:

ஆசியாவில் அநேக பெரிய பட்டினங்கள் உண்டு. நினேவின் அழிவுக்குப் பின் கட்டப்பட்டது பபிலோன் என்னும் தலைநகரம். இது மிகவும் புகழ் பெற்றது. பட்டினம் விசாலமான மைதானத்திற் கட்டப்பட்டிருக்கின்றது. பட்டினம் நாற்சதுரமானது. ஒவ்வொரு பக்கமும் நூற்றிருபது இஸ்ரேடியா நீளமுள்ளது. நான் கண்ட எந்தப் பட்டினத்திலும் பார்க்க இது அலங்கரிக்கப் பட்டிருக்கின்றது. பட்டினத்தைச் சுற்றி அகலமும் ஆழமும் நீர் நிறைவுமுள்ள ஓர் அகழி செல்கின்றது. அதனை அடுத்து ஐம்பது அரசினர் முழம் அகலமுள்ள மதில் கட்டப்பட்டிருக்கிறது. சாதாரண முழத்திலும் அரசினர் முழம் மூன்று அங்குலம் அதிகம். அதன் உயரம் இருநாறு முழம். அகழியிலிருந்து எடுக்கப்பட்ட மண்ணுற் கல்அரிந்து சூளைவைத்து மதிற் சுவர்கள் கட்டப்பட்டன.
செங்கற்களினிடையே நாணற் புற்களைத் தொங்கவிட்டு அகழியின் கரைகள் கட்டப்பட்டிருக்கின்றன. மதில் உச்சியில், ஒன்றை ஒன்றுபார்க்கும்படியாக ஒரு மாடியுள்ள வீடுகள் அமைக்கப்பட்டுள்ளன. வீடுகளுக்கு நடுவில் வெளியிருக்கிறது. இவ்வெளி

---

1. A. H. O. T. N. E. R.—H. Hall.
As matters stand they (Mesapotamians) are just as likely to have been a group of the same as the Egyptians or Dravidians as anything else.—M. P. I. N. A. O. Essays—Huxley.

ஒரு தேர். திரும்பக்கூடிய விலாசமுடையது. மதிலைச் சுற்றி நூறு வாயில்கள் இருக்கின்றன. ஒவ்வொரு வாயிலுக்கும் வெண்கலக்கதவிடப்பட்டிருக்கிறது.

அரண்மனை விசாலமான மதிலினால் சூழப்பட்டிருக்கின்றது. மதிற் கதவு வெண்கலத்தாலானது. யூபிதர் பெலஸ் என்னும் தெய்வத்தின் ஆலயம் இரண்டு ஸ்ரீடியா சதுரமுடையது. இதன் மத்தியில் ஒரு ஸ்ரீடியா சதுரமுள்ள ஒரு கோபுரங் கட்டப்பட்டிருக்கிறது. இக் கோபுரத்தின் மீது இன்னொன்று கட்டப்பட்டிருக்கிறது. இவ்வாறு ஒன்றின்மேல் ஒன்றாக எட்டுக் கோபுரங்கள் கட்டப்பட்டிருக்கின்றன. இவைகளுக்குச் செல்லும் பாதை எல்லாக் கோபுரங்களையுஞ் சுற்றிச் சங்குப் புரிபோல் கட்டப்பட்டிருக்கின்றது. பாதி வழியில், இருந்து களைப்பாறிச் செல்வதற்குரிய இடம் இருக்கின்றது. அங்கு, இருப்பதற்கு ஆசனங்கள் இடப்பட்டிருக்கின்றன. மேலேயுள்ள கடைசிக் கோபுரத்தில் விசாலமான ஆலயமொன்று காணப்படுகின்றது, அவ்வாலயத்தில் அழகிய கட்டிலொன்றும் பொன் மேசையும் வைக்கப்பட்டிருக்கின்றன. அதன் உள் விக்கிரகங்கள் இல்லை. அங்கு இராக்காலத்தில் ஒரு சீவபிராணியும் தங்குதல்கூடாது; தெய்வத்தால் தெரிந்தெடுக்கப்பட்ட ஒரு பெண்மாத்திரம் தங்குதல்கூடும். இவ்வாறு அங்கிருந்த சாலடிய குருமார் கூறினார்கள்.

அவர்கள் கால் வரையும் நீண்ட அங்கிகளை அணிகிறார்கள். அதன்மேல் கம்பளி அங்கியும் அதன் மேல் வெண்ணிற அங்கியும் அணிகிறார்கள்; அத்

தேசத்துக்கேற்ற ஒரு வகை மிதியடியும் தரிக்கிறார்கள். அவர்கள் தலை மயிரை வளரவிடுகின்றனர்; தலைப்பாகை வைத்துக்கொள்கின்றனர் ; மேல்முழுவதும் வாசம் பூசுகின்றனர் ; ஒவ்வொரு மனிதனும் விசேடமாகக் கடையப்பட்ட தடியும் முத்திரையும் வைத்திருப்பான். ஒவ்வொரு தடியிலும் ரோசாப் பூ அல்லி கழுகு அல்லது இவைபோன்ற ஏதும் ஒன்று வெட்டப்பட்டிருக்கும்.

பின்வரும் வகையான பழக்க வழக்கங்கள் பபிலோனியரிடத்திற் காணப்படுகின்றன. இவ்வகை வழக்கங்கள் இல்லீறியா (Illyria) விலுள்ள வெனிசியரிடமும் காணப்படுகின்றது. பின்வரும் சம்பவம் வருடத்தில் ஒரு முறை கையாளப்பட்டு வருகின்றது.

விவாகம் செய்யும் பருவமடைந்த பெண்கள் ஓரிடத்தில் கூட்டமாகச் சேர்க்கப் படுகின்றனர். அவர்களைச் சுற்றி ஆடவர் கூட்டமாக நிற்பர். பின்பு ஒருவன் அவர்களை ஒவ்வொருவராக எழுந்து வரும்படி செய்து, அதிகம் அழகானவளில் ஆரம்பித்து விற்பனை செய்வான் ; ஒருத்தியை விற்றவுடன் அடுத்த அழகானவளை விற்பான். வாங்குவோர் அவர்களை விவாகஞ் செய்து கொள்ளுதல் வேண்டுமென்னும் நிபந்தனைப்படியே அவர்கள் விற்கப்படுகிறார்கள். விவாகஞ் செய்துகொள்ள விரும்பும் ஒவ்வொரு பபிலோனிய தனவந்தனும் ஒருவனுக் கெதிராக ஒருவன் போட்டியிட்டு விலை கேட்பான். விவாகஞ் செய்துகொள்ள விரும்பிய கீழ்த்தரத்தினர் வடிவில்லாத பெண்களை ஒரு தொகை பணத்துடன் பெற்றுக்கொள்ள விரும்பினார்கள். அழகான பெண்

களை விற்று முடிந்தபின், கூறுவோன், மிகவும் அழகில்லாத அல்லது முடமான பெண்களை எழுந்து நிற்கச் செய்து, அவர்களைக் குறைந்த பணத்தோடு ஏற்க விரும்பும் ஆடவருக்குக் கொடுப்பான். இப்பணம் அழகான பெண்களை விற்ற பணத்திலிருந்து கொடுக்கப் படுகின்றது. தந்தை தனது புதல்வியைத் தான் விரும்பியவனுக்குக் கொடுத்தல் முடியாது. விலை கொடுத்து வாங்கிக்கொண்டு போவதின் முன் அவளை மணப்பதாகத் தக்க பிணை அளியாமல் அவளைக்கொண்டு போதலும் ஒருவனுக்கு முடியாது. அயல் கிராமங்களிலுள்ளவர்கள் வந்து பெண்களை வாங்குவதும் சட்ட சம்மதமாயிருந்தது. அவர்கள் தங்கள் இருப்பிடங்களுக்குக் கொண்டு சென்றவுடன் அவர்களைத் தாழ்வாகவும் கொடுமையாகவும் நடத்தாதபடி சட்டங்கள் இருந்தன. இவ்வழக்கம் இப்பொழுது நடையில் இல்லை.

அவர்கள் நோயாளரைச் சந்தைகூடும் இடத்துக்குக் கொண்டு வருவார்கள். சந்தைக்குச் செல்வோர் அவர்களுடன் வார்த்தை ஆடுவார்கள். அவ்வகையான நோயடைந்து சுகம் அடைந்தவர்கள் தாம் கையாண்ட மருந்தை அவர்களுக்குச் சொல்லுவார்கள். அவர்கள் இறந்தவர்களைத் தேனிலிட்டு வைக்கிறுர்கள். அவர்கள் எகிப்தியரைப் போல இறந்தவர்களுக்காக அழுகிறுர்கள்.

பபிலோனில் கன்னிமாடங்கள் இருந்தன. கன்னிப் பெண்கள் வாழும் மாடங்களைப் பற்றித் தமிழ் நூல்களில் அறிகின்ருேம். இவ்வகையான கன்னிப் பெண்களை விடத் தேவதாசிகள் என ஒரு பிரிவினரும்

இருந்தனர். இவர்களின் ஒழுக்கம் இக்காலத் தேவ தாசியரது ஒழுக்கம் போன்றதே[1] தெய்வ உலகத்து மாடு என்று சொல்லப்படும் காராம்பசுச் சிலைகள் பபிலோனில் காணப்படுகின்றன. அவர்கள் ஆலயங்கள், சூரியன் காலிக்கும் திசையை நோக்கிக் கட்டப்பட்டன. அவர்கள் ஆலய அமைப்பும் பிற பூசை முறைகளும் இன்று தென்னிந்திய ஆலயங் களிற் காணப்படுவன போன்றனவே. இந்திய மக்க ளைப்போலவே அவர்களும் ஆலயங்களில் கடவுளைக் கைகூப்பி வணங்கினர்.

## * கிரேத்தா மக்கள்

கிரேத்தா மக்களின் நாகரிகம் எகிப்திய சுமேரிய நாகரிகங்களைப் போலவே மிகப்புராதனமானது. அத்தேச மக்கள் * மீனவர் என்று அழைக்கப்

---

1. " We find remarkable class of honoured women, votaresses, who in some ways resembled the Roman vestals, and possessed usual rights and privileges. These are not to be confused with the religious prostitutes, mentioned by Herodotus, who where certainly a prominent feature in Babylonian religion. They were women who took vows of celibacy though usually dwelling together in special convents, could nevertheless live in this world, and were often normally married. If married (and to possess votaress wife was probably regarded as distinction) a concubine was provided to bear children to the husbands, but had no legal wifely rights which belongs to the votaress.—Ancient History of the Near East — R. H. Hall.

* Crete Minos.

பட்டனர். இங்கு வாழ்ந்த மக்கள் தமிழர். கெரதோதசு என்னும் கிரேக்க சரித்திராசிரியர் கிரேத்தாவிலும் இலிசியாவிலும் வாழ்ந்த மக்கள் தமிழரே எனப் புகல்கின்றார். கெரதோதசு ஆசிரியர் கூறியிருப்பது வருமாறு. "[1]கிரேத்தா என்னும் தீவில் வாழ்ந்தோர் தெமிலியர். அரசுரிமைப் போராட்டத்தால் துரத்தப்பட்ட சபீடோன் என்பவனுடன் வந்து மீனியஸ் நாட்டில் தங்கியவர்கள் தெமிலி என்று அழைக்கப்பட்டனர். இப்பெயர் அவர்களுக்கு இங்கு

---

1. The Lycians were originally sprung from Crete. For in ancient time Crete was entirely in the possession of barbarians...so long as *sarpedon* reigned over them they went by the name of *Termilae* which they brought with them, and the Lycians are still called by that name by their neighbours. But Lycius son of *Pandion* who was likewise driven out by his brother Algeus, came out from Athens. The Termilæ under Sarpedon, in course of time got to be called Lycians after him. Their customs are partly Cretan and partly Carian; but they have one peculiar to themselves, in which they differ from all other nations; but they take their name from their mothers and not from their fathers; so that if any one ask another who he is, he will describe himself by his mothers side, and reckon his maternal ancestry in female line, and if a free woman marry a slave the children are counted of pure birth; but if a man who is a *citizen*, even though of high rank marry a foreigner or cohabit with a concubine the children are infamous—*Herodotus*. 1—173.

வரு முன்னரே உள்ளது. சபிடோனைப் போலவே அரசுரிமைப் போராட்டத்தில் அதேன்சில் நின்றும் துரத்தப்பட்ட பாண்டியனின் மகனுகிய இலசியசின்பின் மீனியஸ் நாடு இலசியா என்னும் பெயர் பெற்றது. இவர்களுக்கிடையே புது மாதிரியான பழக்க வழக்கங்கள் உண்டு. இதனுல் அவர்கள் மற்று எல்லாச் சாதியினரிலிருந்தும் வேறு படுவர் [2]"இவர்கள் தங்கள் வமிசத்தைத் தாய் வழியினின்றும் எடுத்துக் கூறுவர். ஒரு குலமகள், அடிமை ஒருவனை விவாகஞ் செய்யின் அவர்களின் பிள்ளை உயர் குலத்ததாக எண்ணப்படும். குலமகன் ஒருவன் தாழ்ந்த பெண்ணை மணக்கின் பிள்ளைகள் தாழ்ந்த குலத்தனவாகும்." இலசியசு என்பவனுடைய தந்தை **பாண்டியன்** எனப்படுதலும், மக்கள் மீனவர் (மீனேசு) எனப்படுதலும், ஆராயத்தக்கன. கிரேத்தாவின் நாகரிகமே கிரீசு சைப்பிரசு மற்றும் ஐசியன் தீவுகளிலும் பரவியிருந்தது.

## மினேவர் பழக்க வழக்கங்கள் சில

மீனேவ அரண்மனை உத்தியோகத்தர் முகத்தைச் சவரஞ்செய்து தலைமயிரை நீளவளரவிட்டு அதனை அலங்கரிப்பர். ஆடவரும் மகளிரும் கூந்தல் காற்றுக்கு அசையும்படி நீளவளர விட்டிருந்தார்கள். இரு

2. "மேற்குக் கரையிலுள்ள மலையாளிகளுள் சொத்துரிமை பெண்களுக்காதலும், பரம்பரையைப் பெண் வழியினின்று கூறுதலுமாகிய வழக்கங்கள் காணப்படுகின்றன. இவ்வழக்கம் நாயர், தீயர், பன்தர் (Bants). சிரிய கிறித்தவர்களுக்கிடையே இன்றுமுள்ளன.—The Dravidian Elements in Indian Culture P. 126—G Slater.

பாலாரும் மாட்டுச் சண்டைகளை இன்பமாகக் கொண்டாடினார்கள். கோயிற்கருமங்கள் மாத்திர மல்ல அரசியற் கருமங்களும் பெண்களின் அதிகாரத்துக் குட்பட்டிருந்தன. அவர்கள் மற்றெந்தச் சாதி நாகரிக மகளிரைப் போலும் அல்லாமல் ஆடவரைப்போலச் சம உரிமைபெற்று வாழ்ந்தார்கள். பெண்கள் ஒடுங்கிய இடை யுடையவர்களாகவும் கழுத்திலும் மார்பிலும் தங்க, வெள்ளிமாலைகளை அணிந்தவர்க ளாகவும், அரைக்குக் கீழ் அலங்காரமாக மடிப்புவிழும் உடை அணிந்தவர்களாகவும் திகழ்ந்தனர். அவர்கள் தங்கள் கூந்தலுக்குமேல் பொய் மயிரை உபயோகித் தனர். ஆடவரின் உடை மிகவும் அற்பமானது. அவர்கள் அரையில் ஒரு துண்டுகட்டி அதன்மீது கச்சைகட்டி யிருந்தார்கள். எகிப்தியர் வெள்ளை ஆடைகளை உடுப்பர். கிரேத்தியர் புள்ளியிட்ட அல்லது நிறமுள்ள ஆடைகளை உடுத்தனர். வாலி பரும் வாலிபப் பெண்களும் ஒரே பின்னலுள்ள கூந் தலைக் குடுமியாகக் கன்னத்தில் முடிந்திருந்தனர். மீதித்தலை சிரைக்கப்பட் டிருந்தது. வாலிபப் பெண்களும் வாலிபரும் மேற்கொண்ட ஏறுதழுவும் விளையாட்டு மிகவும் கொடியதாகக் காணப்படு கின்றது.

மினோவர் தேரையும் குதிரைகளையும் உபயோ கித்தனர். ஒவ்வொருவரும் வீடுகளில் கடவுட்படி வங்களை வைத்து வணங்கினர். எல்லாத் தெய்வங்க ளுக்கும் மேலாகத் தாய்தெய்வம் ஒன்று வழிபடப் பட்டது. சர்ப்பத் தெய்வங்களும் இருந்தன. சர்ப் பத்தை கையிற் பிடித்து நிற்கும் பெண் தெய்வச்சிலை

கள் காணப்படுகின்றன. பிணங்கள் மண்தாழிகளில் வைத்துப் புதைக்கப்பட்டன. இலிங்க வணக்கமும் காணப்பட்டது.[1]

"ஆதிச்சனல்லூரில் கண்டுபிடிக்கப்பட்ட சரித்திர காலத்திற்கு முற்பட்ட சமாதிகளுள் குருமார் நெற்றியிற்கட்டும் பொன் கயிறுகள் காணப்பட்டன. இவை கிரேத்தாவிற் காணப்பட்டவைகளோடு ஒத்திருக்கின்றன. இவையும் ஹைதரபாத்துச் சமாதிகளில் காணப்பட்ட மட்பாண்டங்களிற் பொறிக்கப்பட்ட எழுத்துகளும் இந்திய மக்களுக்கும் கிரேத்தா மக்களுக்கு முள்ள தொடர்பைக் காட்டுகின்றன. பொனீசிய குருமாரும் இவ்வகையான பொன் நாண்களை உபயோகித் திருக்கின்றனர்.

திராவிடரின் கலைகளும் கிரேத்தாமக்களது கலைகளும் நேரான அல்லது வேறுவழியாக வந்த தொடர்பைப் பெற்றிருந்தன. சிவனை அல்லது காளியைப் போன்ற தெய்வங்கள் மிக ஒடுங்கிய இடையுடையனவாகச் சித்திரிக்கப்பட்டிருக்கின்றன. மினோவரது சித்திரங்களில் ஆடவரும் மகளிரும் இளமை தொடக்கம் ஒருபோதும் கழற்றப்படாத 'ஒட்டியாணங்களை' அரையில் அணிந்திருந்தார்கள் எனத் தெரிகிறது. இடையைச் சிறுக்கச்செய்யும் வழக்கம் இந்தியாவிற் பரவவில்லையாயினும், அவ்வழக்கைப்பற்றிச் சித்திரங்கள் வரையப்பட்டன போலத் தெரிகிறது.[2]

---

1. A. H. O. T. N. E. P. P. 48—49—50 Hall

2. The Dravidian Elements in Indian Culture pp. 78—79.

## பழைய பிரித்தன் மக்கள்

பழைய பிரித்தன் மக்கள் மத்தியதரை மக்கள் இனத்தைச் சேர்ந்தவர்களெனச் சரித்திரகாரர் கூறுப. வடல் என்னும் ஆசிரியர் பொனீசியரின் முன்னோர் சுமேரியரென்றும் பொனீசியரினின்று தோன்றியவர்கள் பழைய பிரித்தன் மக்கள் என்றும் கூறுவர். பொனீசியர் பரதர் எனப் பட்டார்களென்றும் பரதர் என்னும் பெயரினின்று பிரித்தன் என்னும் பெயர் தோன்றிற்றெனவும் அவர் சாதிப்பர்.[1] சுமேரியர் பொனீசியர்களுக்கிடையில் இருந்த கடவுள் வழிபாடு நாகரிகம் முதலியனவே பழய பிரித்தன் மக்களுக்கிடையிலும் காணப்பட்டனவென்பதை அவர் தமது நூல்களில் பலவாறு ஆராய்ந்து விளக்கியுள்ளார்.

"கல்லியா(*Gallia*) எனும் பிராஞ்சி(*France*)லும், பிரித்தானியா (*Britannia*) எனும் இங்கிலாந்திலும் முற்காலம் இருந்த துரூயிதர் (*Druids*) எனும் சாதியார் பிந்திவந்த பிராஞ்சிய ஆங்கில சாதிகளின் வேறானவர்கள் என்பது சரித்திர சம்மதம். இந்த துரூயிதரை கயெலிக் எனும் ஆதி ஐரிஷ் மொழியில் திறஓஇட் (*Draoidh*) என்பர். இவர்கள் பிற்காலம் சமய ஆசாரியர்களாகவும் மாய வித்தைக்காரராகவும் கணிக்கப்பட்ட போதிலும், எல்லோரும் அத்தொழில் பூண்டவர்களல்லர். ஆதிக்குடிகளான பொது மக்

---

[1] "The land of the Barats (Barat-Varsha) a name synonymous with "Barat-ana" or land of the Barats," "which I have proved to be the original name of Britain."—The Indo-sumerian seals deciphered. p. 10—Waddell.

கள் சகலருமே துரூயிதர் எனப்பட்டனர். இவர்களுள் சமய ஆசாரியத் தொழிலை நிகழ்த்தியவர்களைப் பற்றிய வரலாறுகள் மட்டும் உரோமைச் சரித்திராசிரியர் களால் அக்காலம் வரைந்து வைக்கப்பட்டன. இச் சரித்திராசிரியர்களிலிருந்து நாம் அறிகின்ற துரூயிதர் கல்லியாவிலும் பிரித்தானியாவிலும் பின்வந்து குடியேறியோர்கள் அறியாத தத்துவ சாத்திரக் கொள் கைகள் உள்ளவர்கள்; வான சாத்திர உணர்ச்சியில் மேம்பட்டவர்கள்; மறுபிறப்பு உண்டென்றவர்கள்; தங்கள் சீடருக்கு உவமைகளால் போதித்தவர்கள்; மத்தியதரைக் கடலை அடுத்த பழைய இருண்ட நிற முள்ள சனங்களின் தெய்வங்களையே தொழுதவர்கள்; மரத்தோப்புக்களில் தங்கள் சமயக் கிரியைகளை நடத்திவந்தவர்கள்; மர வழிபாடும் உள்ளவர்கள். இவ்விபரங்களாலும் திறஓஇட் எனும் அவர்கள் ஆதிப் பெயராலும் இவர்கள் திராவிடர் எனும் தேமிலர் வகுப்பைச் சேர்ந்தவர்களே எனத்தோன்று கின்றது. இவர்கள் பெயர் திரசிடர் (*Drasidae,*) தசிடர் (*Dacidae*) என ஓர்பால் மருவிவந்தது எனவும், இஸ் பானியா தேசத்து திரகனர் (*Draganes*) என்பவர் களும் இவர்கள் வகுப்பைச் சேர்ந்தவர்களே எனவும் பாதர் ஹிறஸ் கூறுவர்.[1]

மத்தியதரைச்சாதி முதல் பிரித்தன் மக்கள் வரையிலும் உள்ளவர்கள் ஒரே இனத்தைச் சேர்ந்த வர்கள் என சேகி என்னும் இத்தாலியரால் தர்க்க முறையாக ஆராய்ந்து காட்டப்பட்டது.[2]

---

1. சுவாமி ஞானப்பிரகாசர்.

2. " The conception of ' Mediterranean ' race to which the typical brunet peoples of the Mediterranean basin

## போனீசியர்

மத்திய தரைக்கடலின் கிழக்கு ஓரமாக உள்ள நீண்ட நிலப்பரப்பு பொனீசியா என்று அறியப்பட்டது. பனை (ஈந்து) அதிகம் உள்ளமையின் அந்நாட்டுக்குப் பொனீசியா எனப் பெயர் வந்ததெனச் **சரித்திராசிரியர்களின் சரித்திரம்** (Historians' history of the world) என்னும் நூல் கூறுகின்றது. இருக்குவேத காலத்தில் 'பாணியர்' என்னும் ஒரு கூட்டத்தினரைப்பற்றி ஆரியர் அறிந்திருந்தனர். இவர்கள் பெரிய கடல் வியாபாரிகளாயிருந்தனர். பாணியர் என்பது வணிகர் என்னும் தமிழ்ச் சொல்லின் திரிபு என்றும், வணிகர் என்பதைத் திருத்தமாக உச்சரிக்க அறியாத ஆரியர் அதனைப் பாணியர் எனப் பிறழ உச்சரித்தனர் என்றும் கூறுவர் பி. தி. சீனிவாச ஐயங்காரவர்கள். இவர்கள் தென்னாட்டினர்; சுமேரிய மக்களுக்கு இனமானவர்; சூரியக்கடவுளை வழிபட்டனர். இவர்கள் **பரதர்** எனவும் அக்காலத்தில் பெயர் பெற்றிருந்தனர். மகன் யோதரோ காலத்திலேயே இந்திய நாட்டுமக்கள் **பரதர்** எனப் பெயர் பெற்றிருந்தார்கள் என்றும் அதனால் இந்தியநாடு பரதநாடு எனப்பட்டதெனவும் தெரிகின்றது. வியாபாரத்தின் பொருட்டுக் கம்போதியா, சுமத்திரா முதலிய நாடுகளிற் சென்று குடியேறிய இந்தியமக்கள் அவ்விடங்

---

(and out side it as far as Britain) belonged and belong, was crystallized in logical form by an Italian Sergi. To this view based on the study of *craniology* and ethnic *chromatology* '......is a compliment.

A.H.O.T.N.—Eeast p. 115—Hall.

களில் இராச்சியங்களைத் தாபித்துத் தங்கள் நாகரிகத்தையும் கலைகளையும் அவ்விடங்களிற் பரவச்செய்யலாயினர். அது போலவே கடலோடிகளான தமிழ் மக்களில் ஒரு கூட்டத்தினர் மத்திய தரையின் கிழக்குக் கரையில் குடியேறிப் பொனீசிய இராச்சியத்தை உண்டு பண்ணினர் ஆகலாம்.

பொனீசியருக்கிடையில் தென்னிந்திய மக்களிடையே காணப்படுவன போன்று சமாதிகளில் கல் நடுதல், பகல், வேல் இலிங்கவணக்கம் முதலியன காணப்பட்டன. இவர்கள்கோயில்களில்இடபம்(நந்தி) வைக்கப்பட்டிருந்தது. அவ்வகை இடபம் ஒன்றை எச். ஜி. வெல்சு (H. G. Wells) என்பவர் சரித்திரத்தின் வெளிவருணனை என்னும் நூலில் காட்டியுள்ளார். சுமேரியர், பொனீசியர் பிரித்தானியர், கோதியர் என்போர் ஒரு உற்பத்தியைச் சேர்ந்தோர் எனக் கூறுவர் வடல் (Waddell) என்னும் ஆசிரியர். இவர்களின் எழுத்துக்கும் மகன்யோதரோ எழுத்துக்கும் நெருங்கிய தொடர்பிருப்பதாகக் கூறப்படுகின்றது. ஆகவே பொனீசியர் தென்னிந்திய மக்களின் ஒரு பிரிவினரே என்று துணிதலாகும்.

## அசீரியர்

அசீரியர், இந்திய—ஆரியமக்களாலும், புராண இதிகாசங்களாலும் அசுரர் எனப்பட்ட மக்கட் கூட்டத்தினரின் ஒரு பிரிவினர். இவர்கள் ஞாயிற்றை அசுர், வேல் முதலிய பெயர்களால் வழிபட்டனர். கரையுள்ள ஆடைகளை உடுத்து அரையில் கச்சுக்கட்டுதல், வேற் கடவுளுக்கு ஆட்டுக்குட்டியைப் பலியிடுதல், மாற்றூர் ஊர்களைக்கொளுத்துதல் அவர்களிடத்

தில் சிறிதும் இரக்கங்காட்டாதிருத்தல், யுத்தமுறை, கோட்டை கொத்தளங்களமைப்பு, இறந்தவரை அடக்கம் பண்ணுதல் முதலியவைகளால் அவர் தமிழரையே ஒத்திருந்தனர். பதிற்றுப் பத்து புறநானூறு முதலிய நூல்களில் காணப்படும் தமிழர் போரொழுக்கங்களுக்கும் அசீரியர்போரொழுக்கங்களுக்கும் வேற்றுமை கிடையா. இன்று தென்னிந்திய ஆலயங்களிற் காணப்படும் குதிரை வாகனங்களை ஒப்ப அலங்கரிக்கப்பட்ட குதிரைகளே அசீரிய அரசர், தேர்களிற்பூட்டப்பட்டன. சூரியன் என்னும் சொல்லே அசுர் என்ருகி அசுரை வழிபடுவோர் (அசுரர்)அசீரியராயினர். இவர்கள் செமத்திய மக்களைப்போல் மயிரை நீள வளர்த்துத் தாடி விட்டிருந்தனர். மயிர் முதுகில் நீளத் தொங்கும்படி விடப்படாமல் தோளுக்குக் கீழ் கத்தரிக்கப்பட்டது. தலையைச்சுற்றி நாடாக் கட்டப்பட்டது. இவ்வகை நாடாக்களை அரசர் அணிந்தனர். கிரேத்தாவிலும் இந்தியாவிலும் பொன்ஞாண் அணியப்பட்டது. குருமாரும் இவ்வகை நாண்கட்டுவது வழக்கம் அதனைப் பின்பற்றியதே தமிழ்க் குருமார் தலையிலைச் சுற்றி உருத்திராக்கமணி அணிவதுபோலும்.

## எபிரேயர்

இவர்களைப்பற்றி விவிலிய (Bible) வேதத்தின் பழைய ஏற்பாட்டில் அதிகம் அறியக் கூடியதாயிருக்கிறது. இவர்கள் பழைய கிரேத்தா மக்களுக்கு இனமானவர்கள் எனக் கருதப்படுகின்றனர்.[1] இவர்

1. The curious resemblances of the tree and pillar worship of the early Cretians for instance to the Palastian

களுக்கிடையே ஆன்கன்று (இடபம்) பகல் (Baal) வேல் (Bel) இலிங்க மர வணக்கங்கள், காணப் பட்டன. இறந்தவர்களுக்காக முப்பது நாள் துக்கங் கொண்டாடுதல், வெற்றிபெற்ற அரசன் தோற்ற அரச குடும்பங்களின் ஆண் சந்ததிகளை அழித்து விடுதல், இறந்தவர்களுக்காக பெண்கள் கூடி அழுதல் இவை போன்ற பல வழக்கங்கள் இவருள் இருந்தன. சலமன்கட்டிய ஆலயத்தின்வருணனையும் வழிபாட்டு முறையும் தென்னிந்திய ஆலயங்களையும் வழிபாட்டு முறைகளையும் மிக ஒத்தனவே.

## அரேபியர்

செமத்திய சாதியினர் அரேபியாவிலிருந்தே மெசபத்தேமியா சின்ன ஆசியா முதலிய நாடுகளிற் சென்று குடியேறினார்களென்பது சரித்திராசிரியர் களது கருத்து. மற்றச் செமத்திய சாதியாரிடையே காணப்பட்டது போலவே இவர்களிடம் சந்திர சூரிய, விக்கிரக வணக்கங்கள் காணப்பட்டன. இன்று தென்னிந்திய மக்கட் குழுவினர்களிடையே காணப் படுதல் போல (கடவுட்) கல்லுகளை பாலாலும், நீராலும் முழுகாட்டிப் பொங்கிப் படைத்து இரத்தப் பலியிட்டு வழிபடுதல் அவர்கள் வழக்காக விருந்தது. இன்றும் மெக்காவில் இலிங்க வடிவமான கல்லு

veneration of Ashereth and Massebah point to a racial connection between the Mediterraneans and the Palastians which most antedate the coming up the Semits. The tree and pillar worship of Palastine will have been retained by the Semitized Canaanites from other older beliefs. —P, 184 —T. A. H. O. T. N. E.—H. R. Hall.

வழிபாட்டிற் குரியதாயிருக்கின்றது அக்காலத்தில் அரேபிய வியாபாரிகள் இலங்கை இந்தியா முதலிய இடங்களிலிருந்து வாசனைப் பொருள்களை அரேபியாவுக்குக் கொண்டு சென்று, பின் அவைகளைப் பிற நாட்டு வியாபாரிகளுக்கு அதிக இலாபத்திற்கு விற்றார்கள். அக்காலத்தில் அவ் வியாபாரிகள் அச் சரக்குகள் கிடைக்கும் வகையை ஆச்சரியமான முறையில் கூறினார்கள்.[1] இன்றும் மகமதுமதத்தினர் பிறையையும் நட்சத்திரங்களையும் சமயக் குறிகளாகக் கொள்வர்.

## சின்ன ஆசிய மக்கள்

சின்ன ஆசியாவில் கித்தைதி, காசி மித்தினி எனப் பெயரிய சிறு இராச்சியங்கள் இருந்தன. இந் நாடுகளில் வாழ்ந்தோர் ஆரியரல்லாதோர். பிற்காலங்களில் ஆரிய மக்கள் அவ்வாரியரல்லாத மக்களோடு கலந்தனர். அம் மக்களின் நாகரிகம் தமிழ் நாட்டு நாகரிகம் போன்றதே. அம்மக்கள் வழிபட்ட தெய்வங்களுட் சில இந்திரன், வருணன், மித்திரன் முதலியன. சூரியனை அவர் சூரியன் என்னும் பெயராலேயே வழங்கினர். இடப வழிபாடும் இம்மக்கட்

---

1. அவை, கறுவாபட்டை பக்கஸ் தெய்வம் வளர்ந்த இடத்தில் உண்டாகின்றது. மனிதர் வழங்காத மலை உச்சிகளிற் கூடு கட்டியிருக்கும் பறவைகள் கறுவாப்பட்டைச் சுருள்களைக் களிமண்ணினாற் கட்டப்பட்ட தங்கள் கூடுகளுக்குக் கொண்டு வருகின்றன. அராபியர் பெரிய ஆட்டுத் துடை மாட்டுத் துடைகளைக் கூடுகளுக்குச் சமீபத்தில் போடுகின்றார்கள். பட்சிகள் இவைகளை எடுத்துக் கூடுகளுக்குக் கொண்டு போனதும் கூடுகள் பாரந்தாங்கமாட்டாமல் உடைந்து விடுகின்றன. கூடுகளோடு விழும் கறுவாச் சுருள்கள் எடுக்கப்படுகின்றன என்பன போன்றன.

குரியது.[1] இத்தைதி நாட்டுப் பழைய நாணயமொன்றில் சிங்க வாகனத்தின்மீது வீற்றிருக்கும் தாய்த் தெய்வம் காணப்படுகின்றது. இவ்வகைத் தெய்வம் எகிப்திலும் காணப்பட்டது. காசி அரசருள் ஒருவன் துஷ்ரதன் (Dushratta (கி. மு. 2000). இவனே இராமரின் தந்தையெனச் சில சரித்திரக்காரர் கூறுவர். வடல் என்னும் ஆசிரியர் காசி மக்களே வட இந்தியாவிற் குடியேறிச் சத்திரியர்[2] எனப்பட்டனர் எனவும் அக்கேடிய வேந்தனன சார்கன் (கி. மு. 2872) என்பவனே புராணங்களிற் கூறப்படும் சகரன் எனவும் புகல்வர். சகரரின் குதிரையைப் பிடித்துக்கட்டி அவர் 60,000 புதல்வரை (வீரரை) அழித்த கபிலர், கபிலநாகன் எனப்பட்ட தமிழ்வேந்தனெனத் தெரிகிறது.[3]

## அகத்தி ரிசி

இஸ்கித்திய (Scythians) மக்களிடையே அகத்திரிசிகள் என்னும் ஒரு கூட்டத்தினர் இருந்தனர் எனக் கெரதோதசு ஆசிரியர் கூறியுள்ளார். அதனை ஈண்டு குறிப்பிடுகின்றோம். அது அகத்திய முனிவரோடு தொடர்பு பெறுமோ வென்பது ஆராயத் தக்கது.

"பாதி பாம்பும் பாதி பெண் வடிவுமுள்ள (நாக) கன்னிகையிடம் கெக்குலிசு (Hercules) என்பவருக்கு

---

1. "The humped Indian Bull (Bos Indicus) all of which are freely figured in Sumerian Hitto, Phonaecian and Kassi seals as sacred animal of the East—Indo Sumerian seals deciphered. P. 20-L. A. Waddell."
2. Makers of civilization P. 476.
3. The Sun and the Serpent. P. 56.

மூன்று மகவுகள் தோன்றின. முதல் உதித்த மைந் தன் 'அகத்திரிஷிஸ்' (Agathyrishis)[1] எனப்பட்டார். இவரின் சந்ததியினர் அகத்திரிஷியர் எனப்படுவர். இக் கூட்டத்தினர் மிகவும் ஆடம்பரமான வாழ்க்கை யுடையர்; பொன்னாபரணங்களை அணிவர்; ஒருவ ரோடு ஒருவர் பகையின்றி உடன்பிறந்தார்களைப்போல் வாழ்ந்து பலர் ஒரே மனைவியை வைத்திருப்பர்."

குறிப்பு:—கி. மு. மூன்றும் நூற்றாண்டில் எழுதப்பட்ட பெதுங்கேரியர் அட்டவணையில் (Peatingerian Tables) தமி ழர் 'ஸகிதிய தமிறிசி' (Scythia Dymirice) எனப்படுகின்ற னர். இதனால் ஸ்கீதியர் கி. மு. மூன்றும் நூற்றாண்டின் முன்னரேயே வந்து கூர்ச்சரம் முதலிய நாடுகளிற் குடி யேறித் தமிழர்களோடு கலந்துள்ளார்களென விளங்கு கிறது. ஆகவே அகத்தி இருஷி எனப்பட்டவர் வீரமாமுனிவர், டாக்டர் போப்பு (Dr. Pope) டாக்டர் கால்ட்வெல் போன்ற ஒருவராகலாமோ என்பது ஆராயத்தக்கது. அகத்தியர் ஆதியிற் குடகு மலையில் இருந்தமையின் குட(கு) முனியா கிக், கும்பமுனி, குறுமுனி ஆயினர் எனப் பண்டிதர் சவரி ராயரவர்கள் கருதினார்கள்.

## பாரத பூமி அல்லது தமிழ் இந்தியா

பண்டிதர் சவரிராயன் அவர்கள் தமிழர் புராதன கலைஞன் என்னும் பொத்தகத்தில் தமிழரின் ஆதி இருப் பிடத்தைக் குறித்து எழுதியுள்ள பொருளுரையின் பகுதி ஒன்றை ஈண்டு தமிழிற் றிருப்பித் தருகின்றேம். அவ் வுரையில் தமிழர் பாபிலோன் நாட்டினின்றும் வந்தார்கள்

1. Agathirishis are a luxurious people and wear profusion of gold. They have promisecous intercourse with women, to the end that they may be brotherin one of another, and beeing all of one family may not entertain hatred towards each other-Herodotus-4, 9, 10.

எனக் கூறப்படினும் பல ஆராய்ச்சி நுட்பங்கள் காணப் படுகின்றன. இக்கட்டுரை எழுதுங்காலத்தில் சிந்து நதி தீர நகரங்கள்போன்ற பழந்தமிழர் நாகரிகச் சின்னங்கள் கண்டுபிடிக்கப்படாம லிருந்தமையின் மேற்படி ஆசிரியர் தமிழரின் ஆதி இருப்பிடம் பாபிலோன் எனக் கருதினார்கள்.

இந்திய நாட்டிலே ஆரியர் வருகைக்குமுன் வாழ்ந்த மக்கள் பரதர் எனப்பட்டனர். ஆகவே இந்திய நாடு பரதகண்டம் எனப் பெயர் பெற்றது. பரதர் ஆண்மையும் வீரமும் செறிந்த பெருமக்கள். அவர்கள் இஞ்ஞான்று மறைந்துபோன கல்தேய எல்லம் மக்கட் குழுவினரின் ஓர் பிரிவினர்; அக் கேடிய-கல்தேயாவினின்றும் இந்தியாவை அடைந் தோர். அக்கேடிய-கல்தேயாவே பழைய உலக நாகரிகத்திற்கு இருப்பிடம். அம்மக்கள் வெளியேறிய காலம் மனுவின் பெரிய வெள்ளப் பெருக்கை அடுத்தது.

பண்டு என்று முற்காலத்தில் அறியப்பட்ட இந் நாவலந்தீவு இன்று காணப்படுவதுபோ லல்லாது தெற்கே பெருந்தொலைவு நீண்டு விரிந்து கிடந்தது. அதன் பெரும்பகுதி இஞ்ஞான்று கடல்வாய்ப்பட் டது. இந்நிகழ்ச்சியைப் பழந்தமிழ் இலக்கியங்கள் எடுத்து இயம்புகின்றன. நில நூலார் ஆராய்ச்சியும் இதனை வலியுறுத்துகின்றது. தமிழகத்தின் தொடர் பாக இந்துமாக்கடலுள் அகன்று கிடந்த நிலப் பரப்பைக் கடல் விழுங்கிய வரலாறு மக்களால் மறந்து விடப்படவில்லை. மறைந்துபோன நிலம் பஃறுளி ஆறு குமரிமலை என்பவைகளை எல்லையாக உடைய தாயும் எழுநூறு காதம் பரப்புடையதாயும் மக்கள்

நெருங்கி வாழ்ப்பெற்றதாயும், (மனுவின்) வெள்ளப் பெருக்குக்கு முற்பட்ட நாகரிக வளமுடையதாயும் திகழ்ந்தது. நிலநூல், தொல்லுயிர்நூல் ஆராய்ச்சி கள் தலைஎடுப்பதின் நெடுநாள்முன்னரே இவ்வரலாறு கள் தமிழ் நூல்களில் எழுதி வைக்கப்பட்டுள்ளன. கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் வரையப்பட்ட சிலப்பதிகாரத்தில் இவ்வரலாறு "பஃறுளியாற்றுடன் பன்மலையடுக்கத்துக்- குமரிக்கோடுங் கொடுங்கடல் கொள்ள" எனக் குறிக்கப்பட்டுள்ளது. இவ்வர லாற்றினை நக்கீரனாரும் இறையனாரகப் பொருளுரை யில் புகன்றுள்ளார்; இளம்பூரணர் நச்சினார்க்கினியர் என்னும் இரு பெரும் உரையாசிரியர்களும் அதனைத் தொல்காப்பிய உரையகத்தே நவின்றனர்.

"நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவ மும்" என்னும் சிலப்பதிகார அடிஉரையில் அடி யார்க்கு நல்லாரும் இதனைக் குறிப்பிட்டனர்.

வெள்ளப்பெருக்குக்குமுன் மேற்குத் தொடர்ச்சி மலை [1]வடமலை எனப்பட்டது. இப்பெயர் தெற்கில் இருந்து மூழ்கிப்போன தென்கண்டம் தொடர்பா னது. சதபதப் பிரமாணம் என்னும் வடமொழிநூல் மனுவின் பேழை வடமலையில் தங்கியதெனச் சொல்லு கின்றது. மனு பொதியமலையில் தங்கித் தவம் புரிந்த தமிழ் வேந்தனெனப் புராணங்கள் கூறுகின்

1. குமரிநாட்டின் வடக்கெல்லை குமரிக்கோடாயின் இலங்கையிலுள்ள சிவன் ஒளி (எல்லம்) மலையே வடமலை எனப்பட்டது எனல் மிகப் பொருத்தமானது. சிவன் ஒளி மலையே குமரிநாட்டுக்கு மலயத்திலும் அண்மையிலுள்ள மலையாதல் காண்க.

றன. பாகவத புராணம், மனு, திராவிட வேந்த னெனப் புகலும். மகாபாரதமும் புராணங்களும் இப் புதிய தேசத்திற் சென்று குடியேறிய வேறு ஏழு இருடிகளைப்பற்றியும் கூறுகின்றன.

இவ் விருடிகளிலொருவர் புலத்தியர். இவர் வழியில் அகத்தியரும், இராவணனென்னும் தென் னிலங்கை வேந்தனும் தோன்றினர்கள். மனுவின் வரலாற்றினை முதன்முதற் கூறும் சதபதப் பிரமா ணம் வடமலையின் பெயரைக் குறிப்பிடவில்லை. வட மலை என்பது மேற்குத் தொடர்ச்சிமலை என்பதற் கும், பேழை தங்கிய இடம் மலையம் என்பதற்கும் போதிய ஆதாரங்கள் புராணங்களிற் காணப்படு கின்றன. சூரிய குமாரன் மலையத்திலே தவஞ்செய்து கொண்டிருக்கும்போது கிருதமாலை (வையை) ஆற் றில் தெய்வீகமீன் தோற்றிற்று என்று மச்ச புரா ணங் கூறும். திராவிட வேந்தனான மனு கிருதமாலை யாற்றில் பலி செலுத்தினனெனப் பாகவத புராணங் கூறுகின்றது. கிருதமாலை யாற்றோரத்திலிருந்து மனு தவஞ்செய்தாரென்பதை அக்கினிபுராணம் வலி யுறுத்துகின்றது. மகாபாரதத்தின் வனபர்வம் இவ் வரலாற்றைச் சிறிது வேறுபடுத்தி, மனு, சீரிணி அல்லது பாலாற்றங்கரையில் தவஞ்செய்தாரெனக் கூறுகின்றது. பாலாறு ஒரு காலத்தில் பாண்டிய நாட்டின் எல்லையாக இருந்தது. இந்நூல், மனு, அநேக ஆண்டுகளின்பின் வேறு ஏழு இருடிகளுடன் இமயமலை உச்சியினின்றும் தென்பால் வந்தார் எனக் கூறும்.

எல்லாப் பழைய ஆதாரங்களும் மனு தமிழ் உலகில் தவஞ்செய்துகொண்டிருந்தார் என்பதை வலியுறுத்துகின்றன. மனு, தெற்கிலிருந்து வடக்கே சென்றாரென மகாபாரதங் கூறுவது வலியுடைய தன்று. பழைய புராணங்கள் எதுவும் இதை வலி யுறுத்தவில்லை. மகாபாரதத்திலே இவ்வரலாற்றினை எழுதியவர் சதபதப் பிரமாணத்தில் வடமலை எனக் கூறப்பட்டதை இமயமலை எனப் பிழைபட மயங்கி அதனை இமயம் எனப் புகலலாயினார். மனு வுக்கும் இமயத்துக்கும் யாதும் தொடர்பின்று; தொடர்புபடுத்திக் கூறுவதற்குக் காரணம் கிடை யாது. ஆரியரல்லாத மக்களின் இவ்வரலாற்றை வேறுவழிகளால் அறிந்தெழுதிய சதபதப் பிரமாணக் காரர் கூற்றினையே மகாபாரதகாரர் திருப்பிக் கூறி யிருக்கின்றார் என்னும் காரணம் மாத்திரம் கூறுதல் அமையும். வேதகால இந்தியா என்னும் நூலுடை யார், 'இது ஆரியர் கதைகளில் இல்லை. அவர்கள் கதைகளில் இது தனியே நிற்கின்றது. இது அசீரியர் இதிகாசத்தினின்றும் எடுக்கப்பட்டதாகலாம்' எனக் குறிப்பிட்டிருக்கின்றனர்.

மனு தமிழ் உலகத்தில் தோன்றியிருந்தவ ராத லாலும், சூரியகுமாரனை அம்மனு மலையமலையில் தவஞ்செய்தமையாலும், சத்தியவிரதன் என்னும் அவர் கிருதமாலை என்னும் வையை ஆற்றில் பலி யிட்டமையானும்,பாண்டிய அரசரின் இலச்சினையாக் கப்பட்ட தெய்வீகமீன், பாண்டியரின் தலைநகராக வந்த மதுரையிலே தமிழ்ச்சாதியினரின் முன்னே

ஞகிய மனுவின் முன் தோன்றினமையாலும், மனுவும் அவர் வழி வந்தோரும் தமிழரேயாவர்.

இந்திய மக்களின் பழைய நாகரிகத்தை அறிய ஆரம்பிப்போர், அதனைச் சமக்கிருத நூல்கள் மூலமாக ஆராய்வது மிகவும் மோசமானமுறை; அறிவுமுறையில் ஆராயப்புகும் ஒவ்வொருவரும் கிருட்டிணு கோதாவரி வையை ஆற்று வெளிகளைப்பற்றி ஆராய்தல் வேண்டும். இதை விடுத்துக் கங்கைச் சமவெளிகளில் ஆரம்பித்து ஆராய்வதே நீண்டகாலக் கொள்கையாகி விட்டது.

எல்லம் சாதியினரின் ஒரு பிரிவினர் மேற்கு ஆசியாவிலுள்ள தங்கள் இருப்பிடத்தைவிட்டு பலுச்சுஸ்தானத்துக் கூடாகப் போலன் கணவாய் வழியாக இந்தியாவுட் புகுந்து அதன் வடகோடியிற் குடியேறினர்கள்,

இந்தியாவின் வடக்கேயுள்ள பிராகி (Brahui) மலைத் தொடர் பரசீக வளைகுடாவிலுள்ள மொன்சு[1] முனை வரையும் நீண்டிருந்தது. இது பாரதபூமி அல்லது தமிழகத்தின் மேற்கு ஓரமாகும். மேற்கு ஓரத்திலுள்ள பிராகியர், பலுச்சியர் போன்றவர். இவ்விரு பிரிவினரும் பரத அல்லது தமிழ் வமிசத்தைச் சேர்ந்தவர்களே. பிராகிமொழி இந்து ஐரோப்பியமொழிகளில் இரானிய கூட்டத்தைச் சேர்ந்ததென்று முன் கருதப்பட்டது. பேராசிரியர் கால்டுவெல் என்பவர் அது தமிழுக்கே இனமாதலை ஆராய்ந்துக் காட்டியுள்ளார்.

---

1. Cape monze.

இதுபோலவே, வேறும் எல்லம் பிரிவினர் மேற்கே சென்று ஐரோப்பாவின் பல பாகங்களிற் றங்கினர். இப் பிரிவினர் கங்கேரியர், பின்னியர், உரோமையின் பழைய எற்றுஸ்கானியர்[1] என்போர் ஆவர்.

கால்டுவெல் மாக்ஸ் மூலர் முதலிய பழைய கொள்கையாளர் ; இந்தியாவின் வடமேற்கு எல்லைவழியாக மத்திய ஆசியாவினின்றும் புகுந்த ஆரியரால் தமிழரின் மூதாதையினர் துரத்தப்பட்டனர் என்னும் கொள்கை ஆதாரமற்றது. பேராசிரியர் மக்லீன்[2] என்பவர். தமிழர் இந்தியாவின் வெளியினின்றும் வந்தவர்களானல் அவர்கள் தெற்கில் அல்லது கிழக்கிலிருந்து வந்தவர்களாகலாம் எனக் கூறுகின்ருர். இது மக்கள் இனத்தின் ஆதி இருப்பிடம், நீருள் மூழ்கிப் போன லெமூரியாக்கண்டம் என்று கூறும் பேராசிரியர் ஹெக்கலின் கொள்கைக்கு ஒத்திருக்கின்றது. தமிழரின் இருப்பிடம் எதுவென்று நாம் முற்ருக அறியமுடியாமல் இருக்கவில்லை. இன்று தமிழ் மக்கள் தமது ஆதி இருப்பிடம் எதுவென்று ஞாபகத்தில் வைத்திருக்கிருர்கள். எல்லாச் சாதியாரின் கன்னபரம்பரைக் கதைகளும் ஒரு மத்திய இடத்தை மக்களின் சுவர்க்கமாகக் கொள்ளுகின்றன. அது தைகிரஸ்யூ பிராதஸ் என்னும் இருநதிகள் பாயும் நிலமாகும்.பிராகியர் தமது ஆதி இருப்பிடம் கெலாப்மலை எனக் கூறுகின்றனர். பின்னியர் தமது ஆதி இருப்-

1. Archaic Etruscans.
2. Dr. Macleane.
3. Mount Helab (aleppo) In syria.

பிடம் சுமீர்' எனக் கூறுகின்றனர். பபிலோனிலுள்ள அக்கேடியர் தங்கள் இடம் **எல்லம்மலை**[1] என்றனர், இது இக்கால எல்வொன்ட்[2] மலையாகும். இது கிழக்குக்கல்தியாவின் கிழக்குச்சம வெளியில் எழும் ஒருமலை. இந்திய மக்களின் கன்ன பரம்பரைக் கதைகளிலும்

1. இது மேல் கல்தேயத்திலுள்ள வோரிடம் Elwond.

2. Present Elwond was believed to be the spot on which the ark had rested, and the cradle of mankind—Encyclopaedia Brctannica. 'மனுவின் பேழை எல்லம் மலையில் தங்கியதாயின் மனு, மலைய மலையில் தவஞ்செய்து கொண்டிருந்தாரென்பது பொருந்தாது. சமக்கிருத நூல்கள் கூறும் எல்லம் இலங்கை என்பதே பொருத்தமானது. சூரிய குமாரனை மனுவின்பேழை சூரியன் மலையாகிய சிவன் ஒளிமலையிலேயே தங்கிய தென்பது மிகப் பொருத்தமானது. எல்மலை எது என்று விளங்கமாட்டாத வடநூலார் அது மேருவில் உள்ள தென்றனர். இலங்கையிலேயே மனுக்குலம் பெருகிய தென்னும் ஐதீகம் அராபியர் யாவா தேசமக்கள் முதலாயி னோருக்கிடையில் காணப்பட்டமை ஆராயத் தக்கது: புராணங்களின்படி சூரன் தாரகன் முதலியோர் சலப்பிரளயத்துக்குமுந்தியவர்கள். இராவணன் முதலியோர் இக்குவாகு மரபினர். இராவணன் தமிழ் வேந்தன்.

"The origin of man in Ceylon according to the old tradition is illustrated by the names, Adam's peak and adam's Bridge. The Koran which places the paradise in the seventh heaven says that, 'after the fall Adam descended to Ceylon and propagated the human race.' It may also be noted that according to some old Javanese manuscripts recently published (Clarendon press) Brahma a descendant of Adam went from Ceylon and colonised Java"—The ns—A Lecture by the Hon. Mr. K. Balasingam.

புராணங்களிலும் எல்லம் அவர்களின் ஆதி இருப்பிடமெனக் காணப்படுகின்றது. புராணங்களின்படி இளாவிருதம் (எல்ல+விருதம்) மேருவில் உள்ளது. விருதம் என்பது சமக்கிருதத்தில் தேசத்தை உணர்த்தும். இங்கு பதினெண் கணங்கள் வசித்தனர் என்பது புராண ஐதீகம். பதினெண்கணங்கள் தென்னிந்தியத் தமிழரின் பதினெண் பிரிவுகளாகலாம். இக்கதைகளும் குறிப்புகளும் தமிழரின் ஆதி இருப்பிடம் லெமூரியா அல்லது மத்திய ஆசியா வென்று காட்டவில்லை. மனுவின் பேழை தங்கிய இடம் திருவாங்கூர் இராச்சியத்தை அடுத்த மலைய மலை அல்லது வேறன்று.

அக்கேடியாவினின்றும் கிழக்கே சென்று பரவிய எல்லம் அல்லது தமிழ்ச்சாதியினர் மிகவும் பலராக விருந்தனர். ஆரம்பத்தில் இமயமுதல் குமரிவரை ஒரே மொழி வழங்கிற்று. ஆரியருக்கு முற்பட்ட தமிழர் பேசிய மொழி அக்கேடிய கல்தேய மொழிகளுக்கு இனமானது. இம் மொழியின் திருத்தமே வடக்கே பாளியாகவும் தெற்கே தமிழாகவும் மாறினவென்று தேயிலர் என்னும் ஆசிரியர் கூறுவர். அநேக கல்தேய சொற்களையும் பொது வழக்கிலுள்ள பழைய பாளிச்சொற்கள் பலவற்றையும் ஏற்றுக்கொண்டு சமக்கிருதம் உருப்பெற்றதென்பது அவர் கருத்து.

காலத்தில் பாளி புதிய ஆரியத்தோடு கலந்து வட இந்தியமொழிகளைத் தோற்றுவித்தது. தென்னிந்திய மொழி இன்றுவரையும் சுத்தமாகப் பாதுகாக்கப்பட்டு வருகின்றது. தெற்கிலுள்ளோர் தமது மொழியோடு ஆரியச் சொற்களைக் கலப்பது பாவம்

என நினைந்து தமது மொழியைத் தூயதாகக் காப்பாற்றி வந்தார்கள். சமக்கிருதக் கலப்பில்லாத தமிழ் நடையை இன்னும் உலகம் மதிக்கின்றது.

## திரண்டபொருள்

இவ்வியலிற் காட்டப்பட்டுள்ள பல ஆதாரங்களால், இந்தியக் குடாநாடு கடலுள் மறைந்து போன நிலப்பரப்பின் ஒருபகுதி என்பதும், இங்கு நின்றும் சென்ற மக்களே மெசபெத்தேமியா சின்ன ஆசியா எகிப்து முதலிய நாடுகளில் இராச்சியங்களைக் கோலி நாகரிக வெளிச்சத்தை மேற்குத் தேசங்களிற் பரவச் செய்தார்கள் என்பதும் அங்கை நெல்லிக்கனி போல் எளிதில் விளங்கக் கிடப்பனவாகும். இன்னும் இக் கூற்றினை வலியுறுத்தும் பொருட்டுத்'' திராவிட இந்தியா என்னும் நூலிற் கூறப்பட்டுள்ளன சிலவற்றை ஈண்டு மொழிபெயர்த்துத் தருகின்றேம்.

"துணிவுள்ள தமிழர் பண்டைநாளில் சாவகம் கடாரம் (பர்மா) முதலிய நாடுகளோடு வாணிபம் புரிந்து அவ்விடங்களிற் குடியேறினர். இது போலவே கெம்பீரமான கடலோடிகள் சிலர் மத்தியதரைக்கடற் கரை நாடுகளில் குடியேறி யிருத்தல் கூடுமானதே. சேர்யோன் மார்சல் என்பார், மகன் யோதரோ மக்களின் உயர்ந்த நாகரிகத்தைப்பற்றிக் கூறியபின் துணிந்தது போலச் சுமேரியர் மெசபதேமியாவுக்குப் புதிதாய் வந்தவர்களாயிருப்பின் அவர்களின் நாகரிகத்துக்கு ஆரம்பம் இந்தியநாடாகும். பபிலோனிய அசீரிய மேற்கு ஆசிய நாடுகளின் நாகரிகங்களுக்கு மூலகாரணர் சுமேரிய மக்களே. பி. தி. சீனிவாச ஐயங்கார், இந்தியாவின் புதிய கற்கால நாகரிகம் கடல் வழி

யாகப் பழைய அசீரியா வரையும் சென்று சுமேரிய நாகரிகமாக மாறினதென்றும், இக்காலத் தமிழரதும் அக்காலச் சுமேரியரதும் முகவெட்டு ஒற்றுமை தற் செயலாய் ஏற்பட்டதன்று என்றும் புகல்கின்றார். ஹால் என்னும் ஆசிரியர், நாகரிகம் ஆதியில் இந்தியாவில் தோன்றி பபிலோனியரதும் மற்றைப் பழைய சாதியினரதும் நாகரிகங்கள் ஆரம்பிப்பதற்கு மெசபதேமியாவுக்குச் சென்றிருக்கலாம் எனக் கருதினார். மனித நூல் ஆராய்ச்சியாளர் ஒருவர் உலகத்திலே முதற்றோன்றிய சாதியினருக்கு இடம் இந்து சமுத்திரத்தில் மறைந்துபோன தரை எனக் குறிப்பிட்டார். சேர்-வால்டர் இறலி என்பவர் சலப்பிரளயத்துக்குப் பின் மக்கள் பெருகிய இடம் இந்தியா என நவின்றார். சேர்யோன் இவான்ஸ் என்பவர் தென்னிந்தியா மனுக்குலத்தின் தொட்டில் என விளம்புகின்றார். மக்கட்குலங்களைப் பற்றிய ஆராய்ச்சியால் வடக்கிலுள்ளோரும், மத்தியதரைச் சாதியினரும் தென்னிந்தியாவினின்றும் சென்றவர்கள் என நாட்டுதல் வில்லங்கமானதன்று. சரித்திரங்களால் அளக்கமுடியாத பழங்காலத்து மனிதசின்னங்கள் இக்குடாநாட்டின்மேற்குக் கரைகளிற் கண்டுபிடிக்கப்பட்டன. இங்கு பல உகங்களாக வாழ்ந்து கொண்டிருக்கும் மக்கள் தமது விவேகத்தின் பண்பைமாத்திரமல்லாமல் உடற்கூறின் தன்மைகளையும் உலகிற் பரப்பினார்கள். ஆதலினால் சலப்பிரளயத்திற்றப்பிப் பிழைத்தவர்களுக்குத் தென்னிந்தியா ஒதுக்களித்ததெனக்கூறுதல் தவறாகாது;

சலப்பிரளயத்துக்குப்பின் உள்ளமக்களுக்குத் தென்னிந்தியாவே தொட்டிலாகும்”[1]

“ மீன்கொடி படைத்த மேன்மை மனுக்கள்
ஆன்ற பாண்டிய ரனைவருந் தமிழர்.
தெற்கட் பஃறுளி யாறு சீர்சால்
நற்புகழ் வடக்கண் நவிரிமை யார்மலை
உரைதமிழ் நாடா வயங்கிய முற்கால்
திருவிட மெனும் பேரதற்குச் சிறந்தது”

(தமிழர் தொன்மை அகவல்)

---

# இயல் III

## வழிபாடு

மக்கள் அறிவுவளர்ச்சித்தரங்களுக் கேற்ப உலகில் பலவகைவழிபாடுகள் தோன்றலாயின. மக்கள் உயர்ந்த அறிவை அடைந்துள்ள காலத்தும் அவ்வழிபாடுகள் ஆங்காங்கு ஒவ்வோர் இடங்களிற் காணப்படுகின்றன. இறந்தவர்கள்[2], பேய் பாம்பு மிருகம், பறவை மரம், போன்ற வணக்கங்கள் இன்றும் பிற்போக்குடைய மக்களிடையே காணப் படுகின்றன. மக்கள் எல்லோரும் மத்திய இடம்

---

1. Dravedian India pp. 57—61

2. உலகமக்கள் எல்லோரிடையும் இவ்வணக்கம் உண்டு. தமிழர் இவர்களைத் தென்புலத்தார் என வழிபடுவர். பழைய ஐதீகங்கள் விளங்காமல் நெடுகத்தொடர்ந்து வருதலுண்டு. இறந்தவர்களுக்கு மேளமடித்தல் கிரியைகளில் மணிகிலுக்குதல் முதலியன பூதபைசாசங்களை ஒட்டுவதற்கு எனத்தெரிகிறது. முந்திய நோக்கங்கள் இன்று மறக்கப்பட்டனவாயினும் பழைய வழக்கங்கள் நிகழ்ந்து வருகின்றன.

ஒன்றில் வாழ்ந்துகொண்டிருக்கும்போது எல்லாவழி பாடுகளுக்கும் மேலான ஞாயிற்று வழிபாடு தோன்றி வலிமைபெற்றிருந்தது. மக்கள், மத்திய கூட்டத்தி னின்றும் பிரிந்துசென்ற ஞான்று இவ்வழிபாட்டைப் பலவேறு வகைகளில் கைக்கொண்டார்களெனத் தெரிகிறது.

**சிவன்**

**சிவன்** என்பது சிவந்தவன் என்னும் பொருள் தருவதோர் தனித் தமிழ்ச்சொல். பண்டையோர் இப்பெயரை ஆதியில் ஞாயிற்றுக்கிட்டுவழங்கினர். ஆகவே ஞாயிற்று வழிபாடே சிவவழிபாடு என்பது இனிதுபுலனாகும். பரிதியஞ் செல்வற்கு மேற்குத் தேசமக்கள் எல், பகல் (Baal) வேல் (Bel) என்னும் பெயர்கள் கொடுத்து மாபெருங்கோயில்கள் அமைத்து வழிபட்டனர். சுயஸ், யூபிதர், கெக்குலிஸ் வணக்கங்கள் இவ்வழி பாட்டினின்றும் எழுந்தனவே.

எபிரேயரின் பழைய பஞ்சாங்கத்தில் ஞாயிற்றுக் குரிய சித்திரைத் திங்கள், **சிவன்** என்னும் பெயர் பெற்றிருந்தது. எபிரேயமொழியில் எழுதப்பட்ட விவிலிய வேதத்தில் மோசே (கி.மு. 1500) சிவன் மாதத்தின் ஆரும்நாள் இறைவனருளிய பத்துக்கட் டளைகளைச் சினய்மலையினின்று மக்களுக்கு வெளிப் படுத்தினரென்று காணப்படுகின்றது. மோசே காலத் தில் சிவன் என்னும் சொல் மிகப் பழமை பெற்றிருந்த மை அறியக்கிடக்கின்றது. சின்ன ஆசியா மெச பெத்தேமியா எகிப்து முதலிய தேசங்களில் சிவன் என்னும் இடப் பெயர்கள் பல காணப்படுகின்றன. எல் சம்பந்தமாக எப்படி நூற்றுக் கணக்கான

பெயர்கள் மேற்குத் தேசங்களிற் காணப்படுகின்றன வோ அப்படியே சிவன் சம்பந்தமான பெயருள்ள இடங்கள் அங்கு முன் இருந்தனவாகலாம்.

எகிப்திலே **சிவன்** என்னும் பெயருடைய பாலை நிலப்பசுந் தரை ஒன்றுண்டு. இவ்விடம் அமன்யூபிதர் என்னும் தெய்வங்களின் வழிபாட்டுக்குரியது என்று சொல்லப்படுகின்றது. அமன் என்பது எகிப்தியரது பகற்கடவுள். இப்பகற்கடவுள் பிற்காலத்தில் யூபிதர்க் கடவுளாக மாறியுள்ளது. இதனால் ஆரம்பத்தில் இப்பசுந்தரையிலே பகல், சிவன் என்னும் பெயரால் வழிபடப்பட்டதென்றும், அதனால் அவ்விடம் **சிவன்** எனப் பெயர் பெற்றதென்றும் கருத இடமுண்டு.

மெசபெத்தேமியாவில் **மந்தானியர்** [1] என்னும் பழைய பபிலோன் மக்களின் மரபினர் காணப்படுகின்றனர். இவர்கள் வணங்குந் தெய்வங்களுள் ஹபில் **சிவா**, றபு **சிவா** என்னும் இருதெய்வங்கள் உண்டு. சிவா என்னும் சொல்லுக்குப் பொருள் ஒளி எனப் படுகின்றது. சிவன் என்பது சூரியனைக் குறிக்கும் என்பது இதனாலும் வலியுறும்.

அமெரிக்காவிலேகொலறடோ ஆற்று முகத்து வாரத்திலுள்ள பீடபூமியில் பத்தாயிரம் வருடங்களுக்கு முற்பட்ட **சிவன்** ஆலயம் கண்டுபிடிக்கப் பட்டமையால் அதற்கு முன்னிருந்தே **சிவன்** என்னும் பெயர் அந்நாட்டில் வழங்கிவருதல் அறியப்படுகின்றது. அச் சிவனாலயமென்பது உயர்ந்த மலையின்

---

1. Mandains—Habil **ZIVA**, Rabbu **ZIVA**—Encyclopaedia Britannica.

உச்சியிலுள்ள தட்டையான இடமே[1]. இதனால் அம்மலைமுகட்டில் சிவனெனப் பெயர் பெற்ற பகற் கடவுள் வழிபடப்பட்டதெனத் தெரிகின்றது. சூரியனை உயர்ந்த மலை முகடுகளில் வழிபடுதலே எல்லாப் பண்டை மக்களது வழக்கமுமாகும். மலையில்லாத இடங்களில் செய் குன்றுகள்மீது சூரியனின் இலச்சினை வைத்து வழிபடப்பட்டது.

அருக்கன் பாதம் வணங்குவர் அந்தியில்
அருக்கனாவான் அரனுருவல்லனோ" (திருநா. தேவாரம்)

என்னும் தேவார அடிகளும் அருக்கன் வழிபாடும் சிவன் வழிபாடும் ஒன்றே என்பதை வலியுறுத்தும்.

இலங்கையிலே ஞாயிற்றின் ஒளி காலுகின்ற மலைக்கு **சிவன் ஒளி மலை** என்று பெயர். இப்பெயர் மிகப்பழையது. மேற்கிலுள்ளவர்கள், பகல், வேல் என்னும் பெயர்களைத் தம் பெயரின் முன்னே பின்னே நடுவோ இட்டு வழங்கியது போலவே இலங்கை அரசர் பலரும் தம் பெயருடன் **சிவன்** என்னும் பெயரை இட்டு வழங்கினர். சிவன் ஒளி என்பதில் **சிவன்** என்பது சூரியனையே குறித்தல் காண்க.

**ஞாயிறு, உலக மக்கள் எல்லோராலும் வழிபடப்பட்டது.**

உலகமக்கள் எல்லோரும் ஞாயிற்றைப் பல பெயர்கள் கொடுத்து வழிபட்டனர். செமத்திய மக்கள் ஞாயிற்றை எல்லென்னும் பெயர்கொடுத்து

1. The focal point was Siva's Grand Temple a half square mile of solid rock plateau isolated from the main land by 9,000 ft. Canyons eroded by rivers some 200,000 years ago.—News Review-London-Sept. 23-1937.

வணங்கினர்.[1] எல், சிவன், பகல், வேல், கெக்குலிஸ் சுயஸ், யூபிதர் முதலியன ஞாயிற்றுக் கடவுளின் மறு பெயர்கள்.எகிப்தியர் அமன், ரூ என்னும் பெயர்களால் பரிதியஞ் செல்வனை வழிபட்டனர். ஆரிய மக்கள் எல்லோரும் ஒளியுடையவன் என்னும் பொருள் தரும் தேவன்[2] என்னும் சொல்லைக் கடவுளுக்குப் பெயராகக் கொண்டனர். மெக்சிக்கோ பேரு, பிரித்தன் முதல் யப்பான் தேசம் வரையும் சூரியன் வழிபடப்பட்டது. யப்பானிய அரசபரம்பரை சூரியனிலிருந்து தோன்றியதென்பது ஐதீகம். அவ் வைதீகத்தின் படி யப்பானிய அரசன் வெள்ளைக் குதிரையில் சவாரி செய்கிறன்.

பபிலோனில் நிப்பூர் என்னும் பட்டினத்தில் பெரிய சூரியன் கோயில் ஒன்று இருந்தது. சின்ன ஆசியாவிலுள்ள [3] காசியர் சூரியன் என்னும் பெயராலேயே ஞாயிற்றை வழிபட்டனர். அசீரியர், எற் கடவுளைக் குறிக்க அசுர், பகல், வேல் முதலிய பெயர்களை வழங்கினர். சூரியன் என்னும் சொல்லினின்று அசுர், அசீரியர், முதலிய பெயர்கள் தோன்றின என்பர் வடல் என்னும் ஆசிரியர். எபிரேய மக்க

1. All members of the Semitic family of languages have the word El or some modification of it—Theism—E. Britannica.

2. Sans—Devas; Lat-Deus; Lith-Diewas; Old Irish—Dia; Old Norse—Tivar; Iran—Daeva—Prehistoric antiquities of Aryan Peoples — p. 45 — Dr. O. Schrader.

3. Kassites—A.H.O., T.N.E. p. 20.—R. H. Hall.

ளிடையே இவ் வழிபாடு மிகப் பழமை பெற்றிருந் தது. பகல், வேல், இடப, வழிபாடுகளுக்கும் யேகோவா வழிபாட்டுக்கும் இடையில் போராட் டங்கள் நிகழ்ந்தமை விவிலிய வேதத்தின் பழைய ஏற்பாட்டிற் பல்லிடங்களிற் காணப்படுகின்றது.[1] எபிரேயர் எற்கடவுளை முதிய பகல் என்றும் இளம் பகல் என்றும் (Old Baal and New Baal) இரு வகையினராக வழிபட்டனர். முதிய பகல் தாடி யுடைய மக்கள் வடிவினராக வழிபடப்பட்டார். பபிலோனியா எகிப்து சின்ன ஆசியா முதலிய நாடு களிலெல்லாம், சூரியன் நேர் உச்சிக்கு வருங் காலங் களில் ஞாயிறு உதிக்கும் திசையைநோக்கி ஆலயங்கள் கட்டப்பட்டன. சலமன் கட்டிய ஆலயமும் அவ் வகையினதே. கடவுளைக் குறிக்க மகமதியர் வழங்கும் அல்லா என்னும் கடவுட்பெயரும் எல் சம்பந்த மானதே. எல் என்பது அராபிமொழியில் அல் எனத்திரிந்து வழங்கும். எபிரேய மக்கள் தங்கடவுளைக் குறிக்க வழங்கிய **யேகோவா** என்னும் பெயரும் எல் சம்பந்தமானதே[2] இஸ்ர-எல்லர் என்பதில் எல் என்பது எற்கடவுளையே குறிக்கும்.

---

1. They forsook the Lord and served Baal and Ashtoreth—King I.

2. No essential distinction was felt to exist between Jehovah and El, any more than between Assur and El; Jehovah was only a special name of El which had become current within a powerful circle, and which on the account was all the more fitted to become the designation of national God—Jehovah—E. B.

இஸ்ர - எல் என்பதற்கு எற்கடவுள் யுத்தஞ் செய்கின்றாரென்பது பொருள்.[1]

## சூரியத் தூண் வழிபாடு.

மக்கள் பகற்கடவுளின் வடிவாகக் கற்றூண்களை உயர்ந்த இடங்களில் நிறுத்தி வழிபட்டார்கள். இவ்வகை வழிபாடு புதிய உலகம் பழைய உலகம் அடங்கலும் வியாபகமடைந்திருந்தது. எகிப்திய அரசர் பெரும்பாலும் கதிரவன் கோயில்களைக் கட்டி அவைகளில் சூரியத் தம்பங்களை நாட்டி, வைத்தார்கள். எகிப்திலே, அபுகறப் (Abu Gurab) என்னும் இடத்தில் இவ்வகை ஆலயமொன்று இன்னும் சிதையாமல் காணப்படுகின்றது. பொன்னாலும் மரகதத்தாலும் செய்யப்பட்ட இரண்டு சூரியத் தூண்கள் பொனீசியரின் தையர்ப் பட்டினத்திலுள்ள கெக்குலிஸ் ஆலயத்திற் காணப்பட்டன என்று கெரதோதசு ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். பொனீசியர் தாம் சென்று குடியேறிய நாடுகளிலும் இவ்வழிபாட்டைப் பரப்பினர். அவர்கள் சிபிரால்டார் என்னும் இடத்தில் சூரியத்தம்பம் ஒன்றை நாட்டியிருந்தனர். ஆகவே அவ்விடம் இன்றும் "கெக்குலிசின் தூண்கள்" என்று வழங்குகின்றது.[2] "என் சைகிளோபீடியா பிரித்தானிக்கா" என்னும் கலைப்பேரகராதி

1. The word Israel means El does battle.—Israel—Encyclopaedia Britannica.

2. At Tyre as among the Hebrews, Baal had his symbolical pillars, one of gold and smaragdus, which transported to the further west, are still familier to us as the pillars of Hercules.—Baal—E. Britannica.

யில் இவ்வழிபாட்டைப் பற்றிக் கூறியிருப்பது வருமாறு : "பகற்கடவுளின் குறியாகத் தூண்கள் உயர்ந்த இடங்களில் நிறுத்தப்பட்டன. ஆரம்பத்தில் இத்தம்பங்கள் மரத்தோடு தொடர்புடையன வாயிருந்தன. வழிபடுவோன் கடவுளைக்கண்ட பரிசுத்த இடத்தை உணர்த்துவதாக மரம் இருந்தது." தென்னிந்திய ஆலயம் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு மரம் "தல விருட்சம்" என விசேடம் பெற்றிருத்தல் காணலாம். ஆபிரிக்காவிலும் அமெரிக்காவிலும் எகிப்திய சமாதிகள் போன்று எழுப்பிய பெரியசெய் குன்றுகள் மீது சூரிய சந்திரக் கடவுளர் வழிபடப்பட்டனர். அவ்வகைச்செய் குன்றுகள் பல இன்றும் காணப்படுகின்றன. பேபெல் (Tower of Babel) கோபுரமென்பதும் இவ்வகையினதே. பிற்காலத்தில் "மாறுட்டம் கொடுத்த கோபுரம்" என்னும் பெயர் அதற்கு வழங்கப் பட்டது.

கிறித்த மக்கள் ஞாயிற்று நாளைத் தூய நாளாகக் கொள்ளும் வழக்கம் பகல் வழிபாடு காரணம் பற்றியதே. பழைய எபிரேய மக்கள் பூரணை அமாவாசிக் காலங்களிற் போலவே ஞாயிற்றுக் கிழமையிலும் ஆலயங்களிற் பலி செலுத்தி வந்தார்களாதலின் ஞாயிற்றுக்கிழமையின் முதன்மை சூரிய வழிபாடு காரணம்பற்றியது.

---

1. Sabath might have come from Sun worship—Sabath—Encyclopaedia Britannica.

[1]சிலுவைக்குறி, சுவாஸ்திகக் குறிகள் என்பன சூரியனைக் குறிக்கும் அடையாளங்களாகும். இவை கிறித்துவுக்கு முற்பட்ட காலந்தொட்டுச் சூரியக் குறியாக மேற்குத் தேசங்களிலும் கிழக்குத் தேசங்களிலும் வழங்கின. சுவாஸ்திகம் என்பது சிலுவைக் குறியின் வகையே. மகன்யோதரோ முத்திரைகளில் சுவாஸ்திகக் குறிகள் காணப்படுகின்றன.

## முருக வழிபாடு.

எபிரேய மக்கள் பகற்கடவுளை முதிய பகல், இளைய பகல் என்றும் இரண்டு வடிவினராக வழிபட்டனரென்று முன் கூறியுள்ளேம். முருகன் என்பதற்கு இளையவன் என்பது பொருள். இளஞாயிறே முருகன் எனப்பட்டதென்பது தமிழ் நாட்டில் வழங்கும் ஐதீகம். திரு. கலியாணசுந்தர முதலியாரின் முருகன் என்னும் நூலில் காலையில் ஆதவன் கடலிற்றோன்றுங் காட்சியே மயில்மீதெழுந்தருளும் முருகனாக வருணிக்கப்பட்டிருக்கின்றதெனக் கூறப்பட்டிருத்தல் ஈண்டு கருத்தில் வைக்கத்தக்கது. இவ்வழிபாடு கிரேக்க நாட்டில் 'மார்ஸ்' (Mars)

1 The sacred symbols of the Hittites also, including the true cross or the Sun-cross or the Red-cross of St· George of Cappadocia and England and St· Andrews cross are identical with the Sun-cross of Sumerians, Trojans and ancient Britons as displayed in my comparative plates of these crosses—and their grave amulets bear the sacred cup mark skript with invocations to the same devinities as the Sumerians, Trojans and the earliest Brilons—. The makers of civilization—p. 16—Waddell.

வழிபாடாக மாறிற்று. இவ்விளங்கடவுள் யுத்தக் கடவுளாய்க் கையில் வேல் பிடித்தமையின் வேலன் எனவும் பெயர் பெற்றிருக்கலாம். மகன்யோதரோவில் சூரியக்கடவுள் ஆறு கதிர்களைப் பரப்புகின்றதாகவும் ஒவ்வொரு கதிருக்கு நேரிலும் ஒவ்வொரு தலை இருப்பதாகவும் உள்ள தாயத்து ஒன்று காணப் பட்டது.[1] இதிலிருந்தே முருகக்கடவுள் ஆறு தலையுடைய சுப்பிரமணியக் கடவுளாகத் தோற்றமளித்தார் எனக்கருத இடமுண்டு. சிவ வழிபாட்டைத் தலைக்கொண்ட சூரன் முதலிய அசுரருக்கும் ஆறுமுகக் கடவுளுக்கும் நேர்ந்த போர் என்பது முருக வணக்கத்தை ஏற்றுக்கொள்ளாத அசுரருக்கும், முருகவணக்கத்தையுடைய இன்னொரு கூட்டத்தினருக்கும் நேர்ந்த போர்களாகலாம் இறுதியில் வேலாற் பிளவுண்ட சூரனது யாக்கை மயிலும் சேவலுமாகி ஆறுமுகக் கடவுளைத் தாங்கியும், அவர் வெற்றியினைப்புகன்றும் நின்றதெனப் புராணங் கூறுதல் ஆராயத்தக்கது. பகல் வணக்கம் யேகோவா வணக்கங்களுக்கிடையில் இவ்வகைப் போர் நிகழ்ந்ததுண்டு.

முருகக்கடவுள் வள்ளியம்மை என்னும் வேட்டுவ மாதை மணந்துகொண்ட வரலாறும் ஆராயத்தக்கது. தொல்காப்பியத்தில் "கொடிநிலைகந்தழி வள்ளியென்ற

---

1. சிந்து வெளிநாகரிகம்—பக். 216. கடவுளுக்கு ஆறுமுக முண்மையின் அறுவகைச் சமயங்கள் தோன்றியிருக்கலாம். இது சூரியன் எட்டு வீடுகளிற் றங்கிய காலத்தில் வணங்கப்பட்ட எட்டு வடிவங்களே பின் அட்ட மூர்த்தங்களாயின எனக் கருதப்படல் போன்றதாகும்.

—வடு நீங்கு சிறப்பின் முதலன மூன்றும்—கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே" எனவரும் சூத்திரத்திற் சொல்லப்படும் வள்ளி என்பது சந்திரனைக் குறிக்குமென்ப. அவ்வாறாயின் சந்திரவணக்கத்தையே ஒரு காலத்திற் கைக்கொண்டிருந்த குறவர், முருக வணக்கத்தை ஏற்றுக்கொண்ட வரலாறே இவ்வாறு உருவகப்படுத்திக் கூறப்பட்டிருத்தலுமாகலாம். இது ஆராயத்தக்கது. குறப்பெண்கள் ஆடும் ஒருவகைக் கூத்தும் வள்ளிக்கூத்தெனப்படும்.

## தாய்க்கடவுள் வழிபாடு

உலகில் ஆதியில் தோன்றிய வழிபாடு தாய்க் கடவுள் வழிபாடென்பது மக்கள் வரலாற்று நூலார் முடிவு. ஒரு காலத்தில் மக்களுக்கிடையில் நிலையான விவாகங்கள் இல்லாமல் இருந்தன. அக்காலத்துத் தாய் பெறுகின்ற குழந்தைகள் குடும்பத்துக்குச் சொந்தமாயிருந்தன. தந்தைக்குப் பிள்ளைகளிடத்தில் உரிமை இல்லை[1]. ஆகவே தாயிடத்திலே எல்லா வகையான

---

1. இவ்வகை வழக்கம் சீர் திருந்தாத சில மக்களிடையே இன்றும் காணப்படுகின்றது. இவ்வகை வழக்கம் இன்றும் மலையாள தேசத்தில் இருக்கின்றது. "இந்திய நாகரிக வளர்ச்சியில் திராவிடரின் பகுதி" என்னும் நூலில் சிலாற்றர் என்னும் ஆசிரியர் கூறியிருப்பதை இங்கு மொழிபெயர்த்துத் தருகின்றோம். "மலையாளத்திலுள்ள நாயர் சாதியினருக்கிடையில் காணப்படும் விவாகத் தொடர்பு சம்பந்தம் எனப்படும். பெண், தான் விரும்பிய எந்த நேரமும் இத்தொடர்பை வெட்டிவிடலாம்; பின்பு அவள் இன்னொருவனோடு சம்பந்தத்தொடர்பு வைத்திருக்கலாம். அவனுக்கு ஒருவகையான கட்டுப் பாடும் கிடையாது. மலையாளத்தில் பெண் தனது தார்வாட்டில் இருக்கிறாள். அவள் இருக்கும் இடத்துக்கு காதலன்

அதிகாரமும் இருந்தது. பிள்ளைகள் தாயைச் சூழ்ந்து இருந்தார்கள். அவர்கள் கடவுளைத் தாயைப் போன்ற எல்லா வல்லமையும் அதிகாரமுமுடைய வடிவில் வைத்து வணங்கினார்கள். தாய்த் தெய்வத்திற்கு மிருகங்களின் இராசாவான சிங்கம் வாகனமாக்கப்பட்டது. அக்காலம் வழங்கிய ஆயுதங்களில் சிறந்த சூலம் தண்டு வாள் முதலியன அவளுக்கு ஆயுதங்களாக்கப்பட்டன. தாய்த் தெய்வமே யுத்த தேவதையாகவும் விளங்கினாள். சின்ன ஆசியா எகிப்து கிரேத்தா முதலிய நாடுகளில் இவ்வகைத் தாய்த்தெய்வ வழிபாடே எல்லா வழிபாடுகளுக்கும் மேலாக விளங்கிற்று. கித்தைத்தி தேசத்தில் சிங்க வாகனியாகிய தாய்த்தெய்வ வடிவம் பொறித்த பழைய நாணயங்கள் காணப்பட்டன.

## திங்கள் வழிபாடு.

பகல் வழிபாடு தோன்றியபின் திங்கள் வழிபாடு மக்களிடையே தோன்றிப் பரவிற்று. பகலைத் தம்ப வடிவில் வழிபட்ட மக்கள் திங்களை மரங்கள் வாயிலாக வழிபட்டனர். சூரிய சந்திர வணக்கங்கள் யூத மக்களிடையே பகல் (Baal) அஸ்ரோறெத்

---

செல்கின்றான். சில சமயம் காதலன் அவ்விடம் செல்லாமலே நழுவிவிடுகிறான், அல்லது அவள் அவனை அங்கு வருதல் கூடாதென அறிவித்தல் கொடுக்கிறாள். இவ்வாறு சம்பந்தம் குலைந்து போகிறது. பிள்ளைகள் தாய்க்குச் சொந்தமானவை. தந்தைக்கு அவர்களைப் பராமரிக்க வேண்டிய கடமை இல்லை. அவனுக்குத் தனது குடும்பத்திலுள்ள சகோதரிகளின் பிள்ளைகளைப் பராமரிப்பதே கடமை.'' [இவ்வகை வழக்கம் சிங்கள மக்களிடையும் காணப்பட்டதென அறிகிறோம்.]

(Ashtoreth) வணக்கங்களாக வழங்கின. காலத்தில் பகல், ஆண் தெய்வமாகவும் திங்கள் பெண் தெய்வமாகவும் கொள்ளப்பட்டுச் சந்திரத் தெய்வம் சூரியக் கடவுளின் பாரி ஆக்கப்பட்டது. பின்பு, இயற்கையிற் காணப்படும் ஆண் தன்மை பெண் தன்மைகளின் சின்னங்களாகச் சூரிய சந்திரர் கருதப்படலாயினர்.[1] மரத்தின் கீழ் சூரியத் தம்பங்களை வைத்து வணங்கும் முறை அம்மை அப்பர் வணக்கமாக அமைதல் காண்க. இவ்வழிபாடுகள் காரணமாக பழைய அரச பரம்பரைகள் சந்திர வமிசம் சூரிய வமிசம் என்னுப் பாகுபாடு பெற்றிருந்தன. சலமன் கட்டிய ஆலயத்திற்கு முன் இரு பெரிய தூண்கள் நிறுத்தப்பட்டிருந்தன. அவை சூரிய சந்திர வழிபாட்டிற்குரிய சின்னங்களாகும் என ஆராய்ச்சியாளர் கூறியிருக்கின்றனர்.

### அங்கி வழிபாடு.

சந்திர சூரியர் வழிபாடுகளைப் போலவே தீ வழிபாடும் உலகில் பிரபலம் பெற்று விளங்கிற்று. சுமேரியா எகிப்து, சின்ன ஆசியா முதலிய இடங்களில் தீக்கடவுளுக்கு ஆலயங்கள் இருந்தன. நோவாவின் நாலாம் சந்ததியில் வந்த நிம்ரொட் என்பவனால் அங்கி வழிபாடு ஆரம்பிக்கப்பட்டதென விவிலிய வேதத்தின் பழைய ஏற்பாடு கூறுகின்றது.[2]

---

1 Baal the male principle was associated with Ashera the female principle in nature—Baal. E. B.

2 'This was the fourth generation after the flood, for Nimrod was the son of Cush tbe son of Ham, the son of Noah. Nimrod is supposed to have introduced the worship of fire and heavenly bodies. He is known as Bel, Baal (the sun Orion, Atorus.')—Scripture History—P. 22.

இவ்வழிபாடு பாரசீகத்தில் சொராஸ்ரர் என்பவரால் (கி. மு. 700 ?) நாட்டப்பட்டது. அங்கி வழிபாட்டுக்குரிய அரசர் தாம் அக்கினி வமிசத்தினர் என்றனர். இந்தியநாட்டில் இவ்வழிபாடு தொன்மையே உள்ளது. சந்திரன் சூரியன், தீ என்னும் மூன்று ஒளியுடைப் பொருள்களால் மக்கள் இறைவனை வழிபட்டார்கள். இவைகளின் வடிவில் அமைத்த (வட்டம், பிறை, முக்கோணம்) குண்டங்களில் தீ வளர்த்து இறைவனை வழிபடுதல் பண்டையோர் வழக்கு. வேதங்களுக்கு மாறுபட்டனவும், தமிழர்களின் பழைய கடவுட் கொள்கை, ஆலய அமைப்பு, வழிபாட்டு முறைகளை விளக்குவனவுமாகிய ஆகமக்கிரியைகளோடு இம் முத்தீ வழிபாடு தொடர்பு பெற்று நிற்றல் கருத்தில் ஊன்றிப் பார்க்கத் தக்கது.

## இலிங்க வழிபாடு

இறைவனிடத்தில் ஆண் தன்மை பெண்தன்மை என்னும் இரு இயல்புகள் இருத்தலை அறிந்த மக்கள் அவரை அம்மை அப்பர் வடிவில் வழிபடலாயினர். அம்மையை உணர்த்தப் பெண் வடிவுச் சிலைகளும், அப்பரை உணர்த்த ஆண்வடிவுச் சிலைகளும் அமைக்கப்பட்டன. இவ்வழக்கு, ஆண் வடிவை உணர்த்த ஆண் குறியும், பெண் வடிவை உணர்த்தப் பெண் குறியும், அமைக்கும் வழக்காக மாறிற்று. [அக்காலத்தவர்கள் இவ்வாறு செய்வதை இடக்கராகக் கருதிற்றிலர். இக்காலம் பெண்கள் மார்பை மூடிக் கொள்ளாதிருப்பது நாகரிகமன்றெனக் கருதப்படுமாறுலும் இக்காலத்தும் திருத்த

மிக்க பாலித்தீவு, மலையாளத்தின் சில பகுதிகளில் மகளிர் மார்பை மறைப்பதில்லை. இது மக்கள் மன நிலையைப் பொறுத்தது. இன்றும் மேல் நாடுகளில் ஆடையின்றியிருப்பதே சிறந்த முறை எனக் கொண்டு நிர்வாண சங்கங்கள் நிறுவி மக்கள் நிர்வாணமாக வாழ்ந்து வருதலைக் கேள்வியுறுகின்றேம்.] இவ்வகைச் சின்னங்கள் மகன் யோதரோ கரப்பா என்னும் இடங்களிற் காணப்பட்டன. இறைவன் ஆண் தன்மை பெண் தன்மை என்னும் இரு இயல்புகளும் ஒருங்கு அமையப் பெற்றவர் என்பதை உணர்த்த இறைவனைப் பாதி பெண் வடிவாகவும் பாதி ஆண் வடிவாகவும் வைத்து வழிபடுதலின் சுருக்கமாக (முன் கூறப்பட்ட) ஆண்குறி பெண்குறி இலச்சினைகள் இணைக்கப்பட்டன. இது சத்திசிவ வணக்கம் அல்லது இலிங்க வணக்கம் எனப்படும். இவ்வழிபாட்டிற்கு ஆரம்பம் சூரிய சந்திர வணக்கங்களே[1]. இவ்வழிபாடு உலகம் முழு

---

1 Baal—as the Sun-God is conceived as the male principle of life and reproduction in nature. Baal. Himself was represented on the high places not by an immage but by obelisks or pillars. There is reason to believe that the symbols in their earlier from of the sacred tree and the sacred stone, were nothing specially appropriated to Baal worship, but where the mark of sanctuary memorial of places were the worshipper had found god, while the stone pillars also was a premitive altar. However they came to be looked upon as phallic symbols, appropriale only to sensual nature worship and as such were attacked by prophets.—Baal. E. B.

மையிலும் ஒரு காலத்திற்காணப்பட்டது. மேற்குத் தேசங்களிலும் கிழக்குத் தேசங்களிலும் நீண்ட கற்கள் சமாதிகளின் மீது நிறுத்தப்பட்டன. இவை இலிங்கங்களாகவே கருதப்பட்டன. இக்கற்கள் கெட்ட ஆவிகளைத் துரத்தும் மகிமையுடையன என்று மக்கள் நம்பினார்கள். இலிதியா தேசத்தில் அலியாத்தீஸ் என்பவரின் சமாதியின்மீது ஒன்ப தடிக் குறுக்களவுள்ள இலிங்கக்கல் ஒன்று நிறுத்தப் பட்டிருக்கின்றது[1]. சமாதிகளின் மீது இலிங்கக்கல் நடுவது பெரும்பாலும் உலக முழுமையிலும் காணப் பட்ட வழக்கு.

## இடப வழிபாடு

இடபவழிபாடு இந்தியாவில் ஆரம்பித்துக் கிரேத்தா சின்ன ஆசியா பபிலோன் முதலிய நாடுகளிலெல் லாம் வியாபக மடைந்தது. மோசே என்பவர் இஸ்ரஎல்லர் வணங்கிய பொன் இடபத்தை உடைத் தெறிந்த வரலாறு விவிலிய வேதத்தின் பழைய ஏற் பாட்டில் காணப்படுகின்றது எகிப்தியர் ' அப்பிஸ் ' எனப்பட்ட தூய வெள்ளை இடபத்தை வணங்கி னார்கள். மேற்குத் தேசங்களிலுள்ள இடபங் களுக்கு இமில் இல்லை. திமிலுள்ள இந்திய இடபம் பொறிக்கப்பட்ட முத்திரைகள் சின்ன ஆசியா பபிலோன் முதலிய இடங்களிற் காணப்பட்ட

---

1. Phallic emblems for averting evil were plentiful; even the summit of the Tomb of the Alyattesis crowned with enormous one of stone about 9 feet in diameter—Lydia—E. Britannica.

மையின் இடபவழிபாடு இந்தியாவிலிருந்தே மேற்குத் தேசங்களுக்குச் சென்றதெனத் தெரிகிறது.

### நாகவழிபாடு

நாகவழிபாடு பகல்வழிபாடு போலவே உலகம் முழுமையிலும் வியாபகம் பெற்றிருந்தது. இவ்வழிபாட்டின் ஆரம்பம் எவ்வகையினது என்று துணிதல் கூடவில்லை. உலகின் பல பாகங்களில் கூட்டங்களாக வாழ்ந்த மக்கள் விலங்கு பறவை முதலியவைகளில் யாதோ ஒன்றைத்தமதுகுலக்குறியாகக் கொண்டனர். இதனை ஆங்கில மொழியில் 'தோதெம்' (Totem) என வழங்குவர். மயூரர், நாகர்,[2] லம்புக்கர்ணர் கெருடர்; முதலிய பெயர்கள் இதற்கு உதாரணமாகும். இக் குலங்களுக்குரிய விலங்குகளும்,பறவைகளும் அவ்வம் மக்கட் கூட்டத்தினரால் பரிசுத்தமுடையனவாகக் கருதப்பட்டன ; அவைகளின் உருவங்கள் கொடிகளிலும் தீட்டப்பட்டன. ஆகவே ஒவ்வொரு கூட்டத்தினரும் ஒவ்வொரு கொடியுடையவர்களாயிருந்

---

The method of erection of these monoliths is very important as it throws some light on the erection of prehistoric monoliths in other parts of the world where the practice of erecting rough stones still continues. The origin of the above cult is uncertain, but it appears that it is mainly important to this Mon-Khamar intrusion in the East. In his opinion (Dr. J. H. Hutton) the erection of these Monoliths takes the form of Lingam and Yoni "—Pre—Aryan and Pre—Dravidian—P XVII.

2. லம்பு என்பது ஆடு. இலங்கை மக்களின் ஒரு பிரிவினர் லம்புகர்ணர் எனப்பட்டனர்.

தனர். ஆதிமக்கள், மொழியைச் சித்திரவாயிலாக எழுதினர். கட்புலனுகும் பருப்பொருள்களை விளக்க அவ்வப் பொருள்களின் வடிவங்கள் எழுதப்பட்டன. கட்புலனுகாத வீரம், கோபம், தந்திரம், அறிவு முதலி யன போன்ற மனத்தோற்ற மளவிலுள்ள பொருள் களை விளக்க அவ்வக் குணங்களமைந்த பிராணி களின் வடிவங்கள் எழுதப்பட்டன. விவேகமின் மைக்கு ஈயின் உருவமும், விடாமுயற்சிக்குத் தேனீ யின் உருவமும், வெற்றிக்குக் கருடனும் இன்னும் மற்றைக் குணுதிசயங்களுக்கு மற்றைப் பிராணிகளின் உருவங்களும் அறிகுறிகளாக வழங்கி வந்தன. இன்னும் அக்காலத்தவர் குணுதிசயங்களை உணர்த் தும் இரண்டு அல்லது பலவற்றின் அவயவங்களை ஒன்ருகக்கலந்து ஓர் உருவமமைத்து அதை ஒரு பொருளுக்கு அறிகுறியாகவும் வழங்கி வந்தார்கள். உதாரணமாகக் கருடனின் தலையையும், பாம்பின் உடலையும் ஒன்ருகச் சேர்த்து ஒரு உருவமாக எழுதி அதைக் கடவுளுக்கும் அவரோடு கலந்துள்ள இவ் வுலகத்துக்கும் அறிகுறியாக வழங்கி வந்தார்கள். இவ்வகைக் கருத்தமைப்புச் சித்திரங்களிலிருந்தே பண்டை மக்களின் பழைய தெய்வங்களும், இருடி யரும் விலங்குகள், பாம்புகளின் அவயவங்களுடைய வர்களாகச் சித்திரிக்கப் படுகின்றனர் எனக் கருத லாகும்.

பண்டை மக்கட் கூட்டத்தினர் ஒவ்வொருவரும் தம்மிடத்திற் காணப்பட்ட முக்கிய தன்மை ஒன்றை விளக்க ஒவ்வோர் அடையாளமாகிய சித்திரத்தை வழங்கியிருக்கலாம். அவை பிறகாலத்தில் அம்மக்க

ளால் வழிபாட்டுக்குரியனவும் ஆயின என்று கூறுதல் ஏற்றதாகத் தெரிகிறது.[1] சர்ப்ப வணக்கத்தின் ஆரம்பமும் இதுவாயிருக்கலாம். இது ஆராயத் தக்கது.

[2]மோசே என்பவராற் செய்யப்பட்ட வெண்கலப் பாம்பு யேகோவாக் கடவுளின் சின்னமாக வழிபடப் பட்டது. [3]ஓல்ட்ஹாம் என்னும் ஆசிரியர் நாக வணக் கத்தையும் சூரிய வணக்கத்தையும் ஆராய்ந்து சிறந்த நூல் ஒன்று வெளியிட்டுள்ளார். அது நாகவணக் கத்தைப் பற்றி மாத்திரமன்று தமிழ் மக்களைப் பற்றிய அரும்பெரும் பொருள்கள் சிலவற்றையும் விளக்குகின்றது. நமது ஆராய்ச்சிக்கு இன்றியமை யாத அதன் சில பகுதிகளை ஈண்டு தருகின்றேம்.

"இந்திய நாட்டில் படமுள்ள நாகம் பகல் வணக்கத்தோடு தொடர்பு பெற்று வருகின்றது. அது சூரியனினின்று தோன்றியவர்களெனச் சொல்லிக் கொள்ளும் மக்கட் கூட்டத்தினரின் குல இலச்சினை யாகும். நாககுலத்தலைவர் மரணத்துக்குப்பின் பகற்

---

1. எகிப்தியரால் வணங்கப்பட்ட மிருகத் தலைகள் உள்ள தெய்வங்கள் அம்மக்கட் கூட்டத்தினரின் குலக்குறி கள் (Totem) என ஒல்ட்காம் என்னும் ஆசிரியர் குறிப்பிட் டுள்ளார். இது மிகப் பொருத்தமாகத் தெரிகிறது.

2. Mosses himself is said to have made a brazen serpent which down to Hezakial's time continued to be worshiped at Jerusalame as an image of Jehovah—Israel—E. Britannica.

3. The sun and the serpent—chapter X—XI—C. F. Oldham.

கடவுளாகவோ, பிற தெய்வங்களாகவோ வணங்கப் படுகின்றனர். அவர்கள் உருவச்சிலைகளைப் பாம்பு களின் விரித்த படங்கள் கவிந்து காத்து நிற்கின்றன. சூரிய குல அரசர், சூரியக் கடவுளாகவே சீவிய காலத்தில் மக்களால் வழிபடப்பட்டனர். எங்கெங்கு பகல் வணக்கங் காணப்பட்டதோ அங்கெல்லாம் படமுடைய பாம்பு பரிசுத்தமுடையதாகக் கருதப் பட்டது. இந்தியாவிற் காணப்படுதல் போலவே சூரியனை வழிபடும் தேசங்களிலெல்லாம் நாகம் வழி படப் பட்டது. சீனு, பேரு, ஆபிரிக்கா முதலிய தேசங்கள், ஒன்றிலிருந்து ஒன்று மிகவும் தொலை வில் இருக்கின்றன. இந்நாடுகளின் இவ்வழிபாடுகள் மற்றைநாடுகளின் சம்பந்தமில்லாது தனித்துத் தோன்றின என்று கூறுதல் முடியாது. இவ்வணக்க முறை இத்தேசங்கள் ஒன்றிற் காணப்படுவது போலவே மற்றைத் தேசங்களிலும் காணப்படு கின்றது. ஆகவே, சூரிய குலத்தவர் என்று சொல்லிக் கொண்ட ஒரு குலத்தவர்களுடைய மத்தியிலிருந்தே இவ்வழிபாடுகள் பரந்து நாலுதிசைகளிலும் சென் றிருத்தல் வேண்டும். உலகம் முழுமையிலும் நாகம் பரிசுத்த முடையதாகக் காணப்பட்டது. ஆமையும் இவ்வாறே கருதப்பட்டது.

சரித்திரகால ஆரம்பத்தில் சர்ப்ப, பகல் வழி பாடுகள் நன்ருக வளர்ச்சி யடைந்திருந்தன. மிகப் பழங்காலத்தில் யூபிருதசுக்கும் சிந்துநதிக்கு மிடை யில்இவ்வழிபாடுகள் ஓங்கியிருந்தன. அகிக்கும் ஆரிய ருக்கு மிடையில் யுத்தம் நடந்ததென வேதங்களிற் சொல்லப்படும் வரலாறு நாகசாதியினருக்கும் பரசீக

ருக்கு மிடையில் நேர்ந்த போர்களே. பழைய மீதி யாவிலுள்ள எசிதியர் (Yezidis) இன்றும் உதய காலச் சூரியனை வணங்குகின்றனர்; ஆலயங்கள்மீது சர்ப்பவடிவங்களை அமைக்கின்றனர். பபிலோனியா விலும் அதனை அடுத்த நாடுகளிலும் பண்டை நாட் களில் சூரிய, சர்ப்ப வழிபாடுகளே இருந்தன. பபி லோன் மக்களின் ஆதித்தெய்வங்களுள் ஒன்று ஈஆ (Ea); இது ஏழுதலை நாக வடிவுடையது. சாலடிய மக்கள் கிஆ அல்லது ஈஆ (Hea or Ea) வையும் அவரது புதல்வன் மார்டுக்கையும் (Marduk) காத்தற் கடவுளராக வழிபட்டனர். சாலடியரின் மனுவுக்குச் சலப்பிரளத்தைப் பற்றிய எச்சரிக்கை கொடுத்தவர், ஈஆக்கடவுளே. ஈஆ இதனைத் தன் மந்திரிக்குக் கூற அவன் அதனைச் சூரிபாக் என்னும் சாலடிய மனுவுக்கு நவின்முன். ஈஆ என்னும் தெய்வவணக்கம் மிக வியாபகமடைந் திருந்தது. மித்தனி மன்னன் துஷ்ரதன் மூன்றும் அமனேபிசு என்னும் எகிப்திய அரசனுக்கு அனுப் பிய திருமுகத்தில் பல தெய்வங்களுக்குத் துதி கூறி யிருக்கிருன். அத்துதியில் ஈஆ எல்லாமக்களதும் கடவுள் எனக் கூறப்பட்டிருக்கின்றது. சர்ப்பம் செமத்திய மக்களின் சாதிக்குறியாகப் புலப்பட வில்லை. அக்கேடிய சுமேரிய வணக்கங்களோடு அவர்கள் இதனையும் பெற்ருர்களெனத் தெரிகிறது. நியுச்சம்பர் என்னும் பபிலோனிய வேந்தன் மர்டுக் என்னும் பகற்கடவுளின் கோயில்வாயில்களில் தான் நச்சுப்பாம்புகளின் சிலைகளை வைத்தமையைப்பற்றிக் கூறுகின்ருன். காஸ்பியன் கடலுக்குத் தெற்கிலும்

மேற்கிலுமுள்ள தேசங்களிலும் துரானிய மக்களி டையும்சர்ப்ப ஆதவ வழிபாடுகள் காணப்பட்டன. காசியர் (Kassite) என்னும் சின்ன ஆசியமக்களின் ஆதவக் கடவுளுக்குச் சூரியாஷ் என்று பெயர். இது சூரியன் என்னுஞ் சொல்லோடு[1] ஒற்றுமையுடையது. அசீரிய சாசனங்களில் சூரியா என்னும் ஒரு தெய் வத்தின் பெயரும் காணப்படுகின்றது. சாலடியப் பாடல்களில் சொல்லப்படும் தலயாத்தி ரைகள் சோலைகளில் அமைக்கப்பட்ட ஆலயங்கள், வேட்டையாடிய மிருகக்கொம்புகளால் ஆலயங்களை அலங்கரித்தல் முதலியவை போன்றன. இமயமலையி லுள்ள சூரிய, சர்ப்ப வழிபாட்டினராகிய மக்க ளிடையே இன்றும் காணப்படுகின்றன.

இந்திய சூரியகுலத்தையும் காஸ்பியனுக்குத் தெற்கேயுள்ள தேசமக்களையும் இணைப்பதில் சலப் பிரளயவரலாறும் ஒன்ருகும் . இவ்வரலாறு அசுரரால் பாதலத்திலிருந்து கொண்டுவரப்பட்டது. சலப் பிரளயம் நிகழவிருக்கும் சம்பவம்[1] இக்குவாகு வமிசத் தவரும் சூரியனின் புதல்வருமாகிய மனுவுக்கு அறி விக்கப்பட்டது. மனுவுக்குச் சலப்பிரளயத்தைக் குறித்து எச்சரிக்கை செய்தலில் மீன் சம்பந்தப்பட் டிருத்தல், மீன், பேழையைக் கட்டும்படி அறிவித்தல் போன்றவை, சாலடியர், ஈ ஆ என்னும் தெய்வத்

1. "Ishvaku, too from whom many solar dynasties claim descent was a Rajah of Patala" as Sakya Baddhah was of solar·race and a descendant of Ishvaku Buddhists were much intrested in these dynasties— Sun and the Serpent—P 56—56—Oldham·

தைச் சம்பந்தப்படுத்திக் கூறும் சலப்பிரளய வரலாற்றை ஒத்திருக்கின்றன. ஈ ஆ என்னும் தெய்வம் மீன்வடிவிலும் பாம்புவடிவிலும் வணங்கப் பட்டது. சதபதப் பிரமாணத்தில் சலப்பிரளயத் தைப் பற்றிக் கூறுமிடத்து இடங் குறிக்கப்பட வில்லை. மனு தனது காலை வழிபாட்டைச் செய்து கொண்டிருக்கும்போது ஒரு மீன் அவரது கையில் வந்தது. அம்மீன் "என்னைக் காப்பாற்று நான் உன்னைக் காப்பேன்; ஒரு வெள்ளப் பெருக்கு எல்லாச் சீவர்களையும் அழித்துவிடும்" என்றது. மனு, மீனை ஒரு முட்டியுள் விட்டார். அது பெரிதாய் வளர்ந்த போது, அவர் அதை ஒரு குளத்தில் விட்டார். அது பின்னும் பெரிதானபோது அவர் அதைக் கடலில் விட்டார். பின்பு மீன் அவரை ஒரு தோணி செய்யும்படி சொல்லிற்று. மனு அப்படியே செய்தார். சலப்பிரளயம் வந்தது. மீன் தலையில் ஒற்றைக் கொம்புடன் வந்தது. மனு கொம்பில் ஒரு கயிற்றைக் கட்டினார். மீன் அவரை வடமலைக்குக் கொண்டுபோய் விட்டது. மீன், "யான் உன்னைக் காப்பாற்றி விட்டேன். தோணியை மரத்தில் கட்டு" என்று மனுவிடம் கூறிற்று,

மகாபாரதத்தில் இவ்வரலாறு வேறு வகையில் கூறப்படுகின்றது. வைவசுவதமனு வைசால[1] வனத்தில் தவம் செய்துகொண்டிருந்தார். அப்பொழுது

---

1. தக்சசிலம் தக்சக என்றும் தக்ச என்றும் வைசாலி என்றும் வழங்கும். மகாபாரதத்தில் தக்சகன் பெரிய நாக அரசன் என்று சொல்லப்படுகிறான்.—The Sun and the Serpent. (P. 106—Mahabharata adi Paushya P. iii)

ஒரு மீன் ஆற்றங்கரையில் வந்து மற்ற மீன்களைப் பார்த்துத் தன்னைக் காக்கும்படி கேட்டது. மனு அம்மீனை எடுத்துச் சாடியில் விட்டார். (மேல் முன் கூறிய வரலாறு கூறப்படுகிறது). மனு ஏழு இருடிகளுடனும் பலவகையான விதைகளுடனும் தோணியில் ஏறினார். மீன் தோணியை இமயமலைக்குக் கொண்டுபோயிற்று. அத்தோணி ஒரு மரத்திற் கட்டப்பட்டது. பின்பு அம்மீன் இருடிகளைநோக்கி யானே பிரமா; யான் மீன்வடிவெடுத்து உங்கள் "எல்லோரையும் காத்தேன்" எனக் கூறிற்று.

பாகவத புராணத்தில் இவ்விடம் தென்னிந்தியாவென்று கூறப்பட்டுள்ளது. அதில் மனு அல்லது சத்தியவிரதன் திராவிடவேந்தன் எனக் கூறப்படுகின்றான். அங்கு மனு, மலையமலையிலிருந்து ஊற்றெடுத்து வருகின்ற கிருதமாலை (வையையில்) பலி செலுத்தும்போது மீன் அவருடைய கையில் வருகின்றது. சாலடிய, இந்திய சலப்பிரளய வரலாறுகள் ஒரே சம்பவத்தையே குறிக்கின்றன. சீனர்களுடைய சலப்பிரளய வரலாறும் இதையே குறிக்கலாம். சில இந்திய வரலாறுகள் மனுவைக் காத்த மீன் விஷ்ணுவின் அவதாரம் என்கின்றன. பபிலோனிய ஈஆவும் விஷ்ணுவும் கடலோடு சம்பந்தப்பட்டவர்களாகக் காணப்படுகின்றனர்.*

---

*Egyptian name Nu for the "god of the deep" Thus the name Vish-nu is Seen to be the equivalent of Sumerian Pish-nu, and to mean "The reclining great Fish (God) of the waters" a d it will doubt-less be found in that full from of Sumarian when searched for,

சூரியனும் நாகமும் பொனிசியரால் வணங்கப் பட்டன. அவர்கள் இவ்வணக்கங்களைப் பபிலோனிய ரிடமிருந்து பெற்று மற்றைய இடங்களுக்குக் கொண்டுபோயிருக்கலாம். இவ்விருவணக்கங்களும் சீரியாவிலும் மேற்கு ஆசியாவின் பல பாகங்களிலும் காணப்பட்டன. [1]கிரேக்கர் சூரியனையும் பாம்பையும் வணங்கினார்கள். சீகுறொப்ஸ் (Cecrops) என்னும் அதேனிய முதல் அரசன் எகிப்திலிருந்து வந்தானென்பதும், அவன் பாதி பாம்பும் பாதி மனிதனுமாயிருந்தானென்பதும் பழைய ஐதீகங்கள். சரித்திர காலத்தில் கிரேக்கரின் சூரிய சர்ப்ப வழிபாடுகள் வேறு வழிபாடுகளுடன் கலந்திருந்தன. கெரகோதசு காலத்தில் அதேனின் சுற்றுடல்களைக் காக்கும் கடவுள் ஒரு பெரிய சர்ப்பமாக விளங்கிற்று. ஐரோப்பாவின் ஒவ்வொரு இடங்களிலும் சூரிய சர்ப்ப வழிபாடுகள் இருந்தமைக்கு அடையாளங்கள் காணப்படுகின்றன.

எகிப்தில் ஆதிகாலம் முதல் பகலும் படமுள்ள பாம்பும் வணங்கப்பட்டு வந்தன. எகிப்திய அரசர் சூரியனிலிருந்து தமது பரம்பரையைக் கூறினர். அரசன் சூரியனின் அவதாரமென்று கருதப்பட்டான். அவனுக்குக் கடவுளுக்குச் செய்யப்படும் எல்லா

---

and it would seem that this early, "Fish epithet of Vishnu for his "Fish incarnation" continued to be applied by the Indian Brahmans to that sun God even in his later incarnations "is the striding" in heavens—The Sumerian seals deciphered—P.14—Waddell.

1. சாலமிஸ் (Salamis) என்னும் இடம் கிரீசில் சர்ப்ப வழிபாட்டுக்குப் பேர்போனது.

மரியாதைகளும் செய்யப்பட்டன. மரணத்துக்குப் பின் ஒவ்வொரு அரசனும் சூரியனாக வழிபடப் பட்டான். அவனது முடியின் முன்புறத்தில் படமெடுத்த பாம்பின் வடிவம் வைக்கப்பட்டிருந்தது. எகிப்தின் சமூகவழக்கங்களும் கிரியை முறைகளும் மற்றைய சூரியவணக்க நாடுகளிற் காணப்படுவனபோலவே இருந்தன.

எகிப்திலே வணங்கப்பட்ட மிருகங்கள் குலக் குறிகளாயிருந்தன (Totem). எதியோப்பியர் கிறித்த மதத்தைத் தழுவுமுன் சூரியனையும் சர்ப்பங்களையும் வணங்கினார்கள். எதியோப்பிய அரசன் "கெலியோ பொலிஸ்" எனப்படும் சூரிய நகருக்குச்சென்று சூரியன் ஆலயத்தில் குருவாகச் சேவித்தான். எகிப்திய மன்னரைப்போலவே எதியோப்பிய அரசனும் கடவுளுக்குரிய சங்கைகளைப் பெற்றான். எதியோப்பியரே சின்ன ஆசியாவில் குடியேறி காசியர் (Kassites) எனப்பட்டார்கள். இவர்கள் எல்லம்மக்களுக்கு இனமானவர்கள் என்று கருதப்படுவர். நகுஸ் என்னும் எதியோப்பிய அரசரின் பட்டப்பெயர், இமயமலைப் பக்கங்களில் சர்ப்பங்களை வணங்கும் மக்கள் தலைவர்களுக்கு வழங்கும் நெகி (Negi) என்னும் பெயரோடு ஒத்திருக்கின்றது. பண்டுதேசம் (Punt) பாம்புகளுக்கு உறைவிடம் என்று எகிப்தியரால் சொல்லப்பட்டது. பைப்பிரஸ் புத்தகங்களிலுள்ள சில பகுதிகளில் பண்டின் அரசன் பெரிய சர்ப்பமென்று சொல்லப்படுகிறான். கப்பலுடைந்து தட்டுக்கெட்டு நின்ற ஒருவனுக்குப் பெரிய சர்ப்பமொன்று வெளிப்பட்டு நாலு மாதத்துள் ஒரு தோணி

அங்கு வருமென்றும், இரண்டுமாதப் பிரயாணத்தில் அவன் தனது இடத்தைச் சேருவானென்றும் சொல்லிற்றெனக் கூறப்பட்டுள்ளது[1]. ஆபிரிக்காவின் மேற்கு மத்திய பாகங்களிலும் சர்ப்ப சூரிய வழிபாடுகள் இருந்தன. இத் தேசமக்களின் தெய்வமேறி ஆடும் கூத்து முதலியன அவ்வணக்கத்துக் குரியனவே.

மெக்சிக்கோவில் அவ்வழிபாடுகளில் நரபலிகளும் கொடுக்கப்பட்டன. சூரியகுல அரசரால் பாம்பும் ஆமையும் தெய்வத்தன்மையுடையனவாக மதிக்கப்பட்டன. அவர்கள் சர்ப்பத்துக்குப் பலியிட்ட பின்பே எக்கருமத்தையும் தொடங்குவர். அவர்கள் மந்திரவித்தை சம்பந்தமாகப் பயன்படுத்தும் இயந்திரங்கள் இந்தியாவிலும் மற்றும் சூரியவணக்கமுடைய நாடுகளிலும் காணப்படுவனபோலவே இருக்கின்றன, இந்நாடுகளில் எப்படி இவ்வணக்கங்கள் வந்தன வென்பது அறிய முடியவில்லை. அறிய முடியாத பழையகாலம் தொட்டே சீனுவிலும் அதன் அயல் நாடுகளிலும் சூரிய, பாம்பு வணக்கங்கள் இருந்து வந்தன. இந்தியாவிலும் மற்ற இடங்களிலும் காணப்படுதல் போலவே அவை தெய்வமாக்கப்பட்ட முன்னோர் வழிபாட்டோடு சம்பந்தப்படுத்தப் பட்டிருக்கின்றன. சீன அரசன் சூரியனின் புதல்வன் எனப்பட்டான். அவன் உயிரோடு இருக்கும்போது

---

1. அரேபியக்கரையிலிருந்து எகிப்துக்குச் செல்ல இரண்டுமாதமாகாது. ஆகவே பண்டு என்பது தொலைவிலுள்ள பிறிதொரு இடமென நன்கு அறியலாம். அதுவே மலையாளக்கரை. சேரநாடு நாகநாடெனவும் படும்.

கடவுளுக்குரிய சங்கைகளைப் பெற்றான். சீனருக்கு ஆமையும் பரிசுத்தமானது. சீனதளபதி பாம்பும் ஆமையும் பொறித்த கொடியால் அறியப்பட்டான். சீனரின் ஐதீகத்தின்படி பழைய அரசரிற் சிலர் பாதி பாம்புவடிவும் பாதி மனிதவுடிவமுமுடையர். சீனரின் நாகரிகம் காஸ்பியனுக்கும் பரசீக வளைகுடாவுக்கு மிடையிலிருந்து வந்திருக்கவேண்டுமென லக்கோபேரி (M. Terrien de Lacouperie) என்பவர் கருதுகிறார்.[1]

மஞ்சூரிய மக்கள் சூரியவமிசத்தினர். அவர்களின் சர்ப்ப தெய்வங்கள் இன்றும் ஆறுகளுக்கும் மழைக்கும் அதிபதிகள். கொரியாதேசத்தில் அரசர் சூரிய பரம்பரையினர். அவர்களைச் சர்ப்பக்கடவுள் காக்கின்றது. மக்கள் சர்ப்பங்களைக் குலதெய்வங்களாக வணங்குகின்றனர். யப்பானில் சூரியக்கடவுள் பெண்தெய்வமாக வழிபடப்படுகிறது. யப்பானிய அரசர் சூரியதெய்வத்தின் புதல்வர்களாகக் கூறப்படுகின்றனர். யப்பானியர் ஐதீகத்தின்படி மலைத்தெய்வங்கள் சர்ப்பவடிவங்களை எடுத்துள்ளன. இத்தேசங்களில் சூரிய சர்ப்ப வழிபாட்டு முறைகள் இந்தியாவிற் காணப்படுவன போன்றன.

மேலும் இவ்வாசிரியர் குறிப்பிட்டிருப்பன, "பாரதத்தில் சொல்லப்படும் கத்துருவின் புதல்வர்களாகிய நாகர் மலையாளக் கரையிற் சென்று குடியேறினர். இங்கு இலவணன் என்னும் நாகன் ஆட்சி

1. Early Hist. of Chinese civilization P—26, 27.

புரிந்தான். சேர நாடு நாகர் நாடு[1] எனப்படும். சாரை என்பதே சேர என வந்தது. இன்றும் ஒவ்வொரு நாயர் சாதியினரின் கொல்லையிலும் நாக தெய்வங்கள் வழிபடப்படுகின்றன. இராவணன் இராக்கதன் எனப்பட்டாலும் அவன் அசுரவகுப்பின னுவன். இக்குவாகு என்னும் சூரியகுலத் தலைவர் அசுரர் எனப்பட்ட திராவிடவகுப்பைச் சேர்ந்தவர். இராவ ணனும் அவ்வகுப்பிற் றோன்றியவன்" என்பன. இன் னும் பல சரித்திர உண்மைகளை நூல் ஆதாரங் களோடு குறிப்பிடுகின்றார். சித்தார்த்தரும் இக்குவா மரபிற் பிறந்த திராவிடமரபின ராவர்.[2]

---

1. "உத்தர குருவிற் சென்று போகந் துய்ப்பல்" "நாகருலகிற் சென்று போகந் துய்ப்பல்" எனத் தமிழ் நூல்களிற் கூறப்படுமிடம் சேர நாடாகிய மலை நாடாதல் கூடும். அந்நாட்டு வழக்கு இதற்குச் சான்று பகரும். திரிகூட இராசப்ப-கவிராயர் குற்றாலத் தலபுராணத்திலே தரும சாமிச் சருக்கத்திற் கூறியிருக்கும் குறிப்புக்களும் அதற்கு ஆதாரங்களாகும். சூளாமணி என்னும் காப்பியத்தில் நாகர் உலக மகளிரைப்பற்றி வருணிக்கப் பட்டிருக்கும் பகுதி நோக்கத்தக்கது. சிந்தாமணி காரரும் அவ்வாறே வருணித் துள்ளார். முன்னுள்ளோர் கருதிய நாகருலகாகிய போக பூமி என்பது, கட்டழகு வாய்ந்த தங்கப்பதுமைகள் போன்ற இள மகளிரின் சுகத்தைப் பருகித் திளைத்துச் செம்மாந்திருக்கும் இடமாகும் இந்திரபோகம் முதலியன வும் இவ்வாறே வருணிக்கப்பட்டுள்ளன.

2. In pathala rcigned the Royal Rishi Kapila Vasudeva or Kapila Naga, who deslroyed the sons of Sagara (Mahabhara Uthiogo Bavathiano P. C. VIII.)

This Yadu the son of Hariaswa, who was a son of Ishvaku was, carreed off by the naga Royal Dhumavarna whose kingdom was called Ratna Dwipa (the land of gems) and the people there had trade, and fished for pearls. (Harivansa) 399, 401.

கிறித்தவாண்டின் முற்பகுதிகளில் சீனயாத்திரிகர்கள் இந்தியாவுக்குச் செல்லும் மார்க்கத்தில் சர்ப்பதேவதைகள் எல்லா ஆறுகளையும் குளங்களையும் ஆள்வதைக் கண்டனர். திபெத்தில் இன்றும் குளங்களும் நீரூற்றுக்களும் சர்ப்பதெய்வங்களாலாளப்படுகின்றன. ஸ்பானியர் அமெரிக்காவுக்குச் சென்றபோது எங்கும் சூரிய சர்ப்பவணக்கங்களே காணப்பட்டன. அமெரிக்காவில் படமுள்ள பாம்புகள் காணப்படாமையில் சலசலக்கும் பாம்புகள் (Rattle snakes) அவைகளுக்குப் பதில் வணங்கப்பட்டன. பேருவில் கசமார்க்கா என்னுமிடத்தில் சர்ப்ப ஆலயத்தில் சர்ப்பவடிவக் கல் இருந்தது. ஆமையும் அமெரிக்கரால் தெய்வத்தன்மையுள்ளதாகக் கருதப்பட்டது. ஆமையும் பாம்பும் மனிதத் தலையுடையனவாகச் சிலைகளிற் காணப்படுகின்றன. இங்கும் அவை தம் முன்னோராகவும் தம்மைக் காப்போராகவும் கருதப்பட்டன. வேதங்களிற் சொல்லப்படும் காயத்திரி அல்லது சாவித்திரி செபம் சூரியனைத் துதிப்பதே.

## மால் வழிபாடு.

மக்கள் வேடன் இடையன் உழவன் என வெவ்வேறு வகை வாழ்க்கை முறைகளைக் கையாண்டு வருகின்றனர். ஆடு மாடுகள் மேய்தற்கேற்ற காடு சார்ந்த நிலங்களில் ஆயர் தங்கி வாழ்ந்தனர். ஆதிகாலத்தில் ஒவ்வொரு கூட்டம் மக்களும் ஒவ்வோர் தெய்வத்தைத் தம் குல தெய்வம் எனக்கொண்டு வழி பட்டனர். இத்தெய்வங்கள் பெரும்பாலும் அவ்வக் கூட்டங்களுக்குத் தலைவராயிருந்த மக்களே எனத் தெரிகின்றது, இற்றை

ஞான்றை மக்கள், குலதெய்வங்களாகக் கொண்டு வணங்கி வரும் தெய்வங்களைப் பற்றி ஆராயுமிடத்து அவர்கள் ஒவ்வோர் கூட்டம் மக்களுக்குத் தலைமை தாங்கி அவர் தம்மைக் காத்த வலிய தலைவர்களாகவே காணப்படுகின்றனர். முல்லை நிலத்துக்குத் தெய்வம் மாயோன் அல்லது மால். மாயோன் என்ப தற்குக் கரியவன் என்பது பொருள். ஆயர், தம் கூட்டத்துக்குத் தலைவனாய் நின்று தம்மைப் பகைவரி னின்றும் காத்த வலியோனை மாயோன் என்னும் பெயரால் வழிபட்டனர். பழைய செய்யுட்களில் பெண்ணின் அழகை வியக்குமிடத்து 'மாயோள்' என்னும் சொல் வழங்கப்பட்டிருத்தல் காணக. மாயோள் என்பது கரியவள் என்னும் பொருள் தரும். அக்காலத்து அக்கூட்டத்தார் கறுப்பை அழகாகக் கருதியிருக்கலாம். இவ்வழிபாடு பாரதகாலத்திற்குப் பின் திருமால் வழிபாடாக மாறிற்று.

விஷ்ணு வணக்கம் சூரிய வணக்கமாகும். சூரியன் உதயத்திலும், மத்தியானத்திலும், அத்தமனத்திலும் செல்லும் செலவு சூரியனின் மூவடிகள் எனப் படுதலே இதற்குச்சான்று. விஷ்ணுவின் கையில் இருப்பதாகிய சக்கரம் சூரியனைக் குறிக்கும் என்ப. பாரத காலத்திற்கு முன்னரே ஆரியரை எதிர்த்த கிருஷ்ணர்கள் இருந்திருக்கிறார்கள். பிற்காலத்தில், கிருட்டிண, விஷ்ணு, திருமால் வழிபாடுகள் இணைந்து ஒன்றாயின.

## வேந்தன் வழிபாடு.

பயிர்ச்செய்கைக்குரிய நாடுகளிலிருந்த மக்கள் ஆதிகாலத்தில் பயிர்ச் செய்கைக்கேற்ற குளங்கள்

தொட்டும் கால்வாய்கள் வெட்டியும் நாட்டை வளம் படுத்திய மன்னரைத் தெய்வமாக வணங்கினர்கள். எகிப்தியர் தம் முதல் அரசனைத் தெய்வமாக வழிபட்டனர். அவனும் அவன் வழி வந்தோரும் பயிர்ச் செய்கைக்குரிய காலத்தில் முதன் முதல் ஏர் பிடித்து உழுதல் மரபாயிருந்தது. இவ்வழக்கு இலங்கை அரசரிடத்தும் இருந்து வந்தது. இலங்கையிலும் இவ்வாறே பெரிய குளங்கள் தொட்டுப் பயிர்ச் செய்கையை வளம்படுத்திய மன்னர் வழிபடப் பட்டனர். சுமேரிய அரசனும் இவ்வாறே வழிபடப் பட்டான். இவ்வாறே தமிழ் நாட்டிலும் வேந்தன் வணக்கம் வயலும் வயல் சூழ்ந்தனவுமாகிய நிலங்களில் வாழ்ந்த மக்களிடையே இருந்ததெனத் தொல் காப்பியம் கூறுகின்றது. இவ்வேந்தன் வணக்கம் இந்திரன் வணக்கமாக இலக்கியங்களில் கூறப்படு கின்றது. இவ்விந்திரனும் ஆரியர் கடவுளாகிய இந்திரனும் ஒருவராவரோவென்பது ஆராயத்தக்கது. வடநாட்டார் இந்திரனை வேள்விகள் வாயிலாக வழி படுவர்; தென்னுட்டிலோ விழாக்கொண்டாடி வழி படுவர். வடநாட்டார் இந்திரன் தெய்வ உலகத் திற்கு அரசன் எனப் புராணங்கள் கூறுதலின் தென் ஞட்டார் தம் வேந்தனுக்கு, தேவர் உலக அரசன் என்னும் பொருளில் இந்திரனெனப் பெயரிட்டுத் தம்மரபுப்படியே பழைய வழிபாட்டை நடத்தி வந்திருத்தலும் கூடும்.

சுமேரிய மக்கள் இந்திரு என்னும் ஒரு தெய் வத்தை வழிபட்டனர். அவ் இந்திரு சூரியனைக் குறிப் பதாயிருந்தது. “ வச்சிரத் தண்டத்திறைவோன் ”

என இந்திரன் இலக்கியங்களிற் கூறப்படுவன். ஆராயுமிடத்து வேந்தன் வழிபாடே இந்திரன் வழிபாடல்லது வேறன்று. வேந்தன் வழிபாட்டிலிருந்தே ஆலய வழிபாடு ஆரம்பித்திருக்கலாம். பழைய கால அரசனொருவனுக்குச் செய்யப்படும் ஆசார உபசாரங்களே கோயிற் கிரியைகள் திருவிழாக்கள் என்பன.

## வருணன் வழிபாடு

தமிழ் நாட்டில் வாழ்ந்த கடற்கரை மக்கள் வருணனைக் குலதெய்வமாக வழிபட்டனர். சின்ன ஆசியாவிலுள்ள மித்தனி (Mitanni). மக்களிடையே இந்திர வருண வழிபாடுகள் காணப்பட்டன. இந்திய ஆரியரிடையிற் காணப்பட்ட வருணன் வழிபாடும் தமிழ் நாட்டிற் காணப்பட்ட வருணன் வழிபாடும் வெவ்வேறு இயல்பின. இந்து ஆரியருக்கும் தமிழருக்கும் பொதுவிற் காணப்படும் ஒவ்வொன்றையும், தமிழர்கள் இந்து ஆரியரிடமிருந்து பெற்றார்கள் என்று கூறுவது ஆராய்ச்சி யாளர்க்கு இயல்பாயிருந்தது. ஆராய்ச்சியில், ஆரியக் கூட்டத்தினரின் ஒரு பிரிவினராகிய இந்து ஆரியருக்கிடையில் மாத்திரம் காணப்படுவனவும் மற்றை ஆரியக் குழுவினருக் கிடையிற் காணப்படாதனவுமாகிய எல்லாம் இந்து ஆரியரால் தாம் குடியேறிய நாட்டில் தொன்மையே நாடு நகரங்களையும் கோட்டை கொத்தளங்களையும் அமைத்துச் செவ்வனே வாழ்ந்த திராவிட மக்களிடமிருந்து பெற்றன

வாம் என்பது இற்றை ஞான்றை ஆராய்ச்சியாளர் துணிபாகும்.[1]

### பல வணக்கங்கள் ஒன்று படுதல்

உலகில் சூரிய வணக்கமே எல்லாவணக்கங்களி லும் மேலாக வியாபகம் அடைந்திருந்தது. அதனுள் மற்றைய வணக்கங்கள் எல்லாம் அடங்கி இருந்தன. அவ்வணக்கங்களை எல்லாம் ஒன்று சேர்க்கப்பட்டதே

---

1. சிலாற்றர் கூறுவது வருமாறு ; இன்று கோயிற் பிரா மணர் சமஸ்கிருதத்திலும் பார்க்க ஆங்கிலத்தில் புலமை யுடையவர்களாகக் காணப்படுகின்றனர் ; வேதங்களை விட ஷேக்ஸ்பியர் நூல்களை அவர்கள் நன்கு அறிவார்கள். சாதாரணத் தமிழ்ப் பிராமணன் தமிழிலும் பார்க்க ஆங் கிலத்தை நன்ருய் எழுதவும் படிக்கவும் அறிவான் ; ஆங் கிலத்தை அவன் தனது சொந்தப் பாஷைபோலப் பழகிக் கொண்டான். ஆகவே அரசாங்க உத்தியோகங்களும் பிற உத்தியோகங்களும், பத்திரிகை நடத்தும் தொழிலும் அவன் கையிலேயே இருக்கின்றன. ஆரியர் தமது அதி காரத்தைப் பஞ்சாப் வெளிகளில் நாட்டியபோது, இதே நோக்கத்துடன் தமிழ்ப் பிராமணர் சமஸ்கிருதத்தைப் பயின்ருர்கள். அவர்கள் அம்மொழியில் மந்திரவித்தை முதலிய மகத்துவம் இருப்பதாகவும் அது பரிசுத்தமான ஒரு சாதியாருக்கு மாத்திரம் உரிய தெனவும் கூறிக் கொண்டார்கள். இது அதிகாரத்தையும் வலிமையையும் தேடிக்கொள்வதற்குரிய உபாயமாகும். பிராமணர் இவ் வாறு சிறிது சிறிதாகத் தமிழில் சமஸ்கிருதத்தைப் புகுத்த லாஞர்கள். ஆனல் திராவிட சமூகம் அதை அவாவுடன் ஏற்றுக்கொள்ளவில்லை. இது ஆரம்பத்தில் சென்னை மாகாணத்தில் ஆங்கிலத்தைப் பரப்பியது போலாகும். தமிழர் இவ்வாறு மொழியளவில் ஆரியமாக்கப்பட்டு வரு கையில் ஆரியர் சீர்திருத்த முறையில் தமிழர் ஆக்கப் பட்டார்கள்.'' (Dravidian Elemants in Indian culture—P 64.

சிவமதமாகும். அஞ்ஞான்றமைக்கப்பட்ட திரு வுருவம் இஞ்ஞான்று காணப்படும் சிவவடிவே யாம். மக்கள் எங்கும் நிறைந்த கடவுளை அழகிய மனிதவடிவில் வைத்து வழிபட ஆரம்பித்தனர். சிவன் வடிவம் தாடியில்லாதும் சடாமுடியுடனும் காணப்படுகின்றது. இதனால் முகத்தை மழித்துச் சடையை உச்சியில் முடியும் வழக்கமுடைய மக்க ளாலே இவ்வடிவம் அமைக்கப்பட்டதென்பது புல னாகின்றது. தென்னிந்திய கோயிற் சிற்பங்களிலும் கிறித்துவுக்கு முற்பட்ட இலங்கைச் சிலைகளிலும், அரசரும், பிறரும் தாடியில்லாதவர்களாகவும் சடை யுடையவர்களாகவும் அமைக்கப்பட்டிருக்கின்றனர், சுமேரிய எகிப்திய கிரேத்தா அரசரும் உயர்ந் தோரும் முகத்தை மழித்திருந்தார்கள். சிவன் புலித் தோல் உடையினரும் யானைத்தோற் போர்வையின ருமா யிருத்தலின் மக்கள் தோல்களையே உடையாகக் கொண்டகாலத்தில் இவ்வழிபாடு ஆரம்பித்ததாதல் வேண்டும்.

அக்காலத்தில் மக்கள் என்பையும் சங்குமணி களையும் மாலையாக அணிந்தனர்; காட்டுப் பூக்களைச் சூடினர். ஆகவே அவர்கள் தங்கடவுளுக்கு என்பை மாலையாக அணிந்தனர்; சங்கைக் குழையாக அலங் கரித்தனர்;(வைத்துஉண்டாக்காத)எருக்கு,ஊமத்தை, கொன்றை முதலியவைகளின் மலர்களைச் சூட்டினர்; அழகிய மான்மறியைக் கையிற் கொடுத்தனர். இவ் வழிபாட்டோடு தனித்தனியே இருந்த சந்திரசூரிய அங்கிவழிபாடுகள் இணைக்கப்பட்டபோது அவை அக் கடவுளுக்குக்கண்களாயின, ஆங்காங்குமக்களிடையே

காணப்பட்ட பேய்வணக்கம் இதனோடு இணைக்கப் பட்டபோது பேய்கள் சிவனுக்குக் கணங்களாயின. இப்படியே சர்ப்பம், இடபம் முதலிய வணக்கங்கள் இணைக்கப்பட்டபோது சர்ப்பம் சிவனுக்கு ஆபரண மும் இடபம் வாகனமும் ஆயின, தாய்க்கடவுள் சிவனின் மனைவியாக்கப்பட்டது. மற்றைத் தெய்வங் களும் சிவனின் உறவின்முறையின ராக்கப்பட்டன. நடராச வடிவில் தூக்கிய பாதத்தா லருளலென்பது, அக்கால அரசர் தமது ஆணைக்குட்பட்டவர்கள் காலில் விழுந்து பணியுமிடத்துக் காலைத்தூக்கித் தலையில்வைத்தல் மரபு. இதுவே சமய சம்பிரதாயத் தில் திருவடி தீக்கை எனப்படுவதுமாகும். இது கிழக்குத் தேசங்கள் எங்குமுள்ள வழக்கு. இவ்வாறு சிவமதம் எல்லாமதங்களையும் உள்ளடக்கி நிற்றல் காண்க. மகன்யோதரோ காலத்திலே [1]சிவன் பசு பதியென்றும், அவருக்கு மூன்று கண்கள் உண்டென் றும் கொள்ளும் கொள்கைகள் வேரூன்றி யிருந்தன.

"எந்நாட் டவர்க்கு மிறைவா போற்றி"

"தோற்றந் துடியதனிற் றேயுந் திதியமைப்பிற்
சாற்றிடு மங்கியிலே சங்காரம்—ஊற்றமா(ய்)
ஊன்றுமலர்ப் பதத்தே உற்றதுரோத முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு"

---

1. உருத்திரன் என்பது சிவந்தவன் என்னும் பொருள் தருவது. இது சிவன் என்பதின் வடமொழி ஆக்கம். தென் னாட்டு ஆலயப் பெயர்களும் புராணங்களில் வரும் தமிழ் அரசர் பெயர்களும் வடமொழி ஆக்கப் பெயர்கள் பெற்று வழங்கும். இது வடமொழி மோகம் தென்னாட்டார் தலைக் கேறி யிருந்த கால நிகழ்ச்சி. அக்காலத்திலேயே தமிழ்க் கடவுளருக்குச் சமக்கிருத த்திற் றுதிபாடும் வழக்கு நுழைந்தது.

# இயல் IV

## மொழி

ஆதிகால மக்கள் எவ்வாறு பேசக் கற்றுக் கொண்டார்கள் என்பதை நாம் ஊகித் தறிதல் கூடும். ஆரம்பத்தில் மக்கள் ஊமரும் செவிடரும் பேசுதல் போலச் சைகைகளாற் பேசினர்; பின், சூழ இருக்கும் விலங்குகள் பறவைகள் இயற்கைப் பொருள்களின் ஒலிகளைக் கேட்டுக் கருத்திலமைத்து அவ்வொலிகளையே அவ்விலங்குகள் பறவைகள் இயற்கைப் பொருள்களுக்குப் பெயர்களாகக் கொண்டனர். இது காகா எனக்கத்தும் பறவையைக் காகம் என்றும் கூகூ எனக்கத்தும் குருவியைக் குயிலென்றும் பெயரிட்டு வழங்குதல் போலவன. பின்பு அவர்கள் தம்மால் அறியப்பட்ட எல்லாப் பொருள்களையும், செயல்களையும் பொருள்களின் பண்புகளையும் குறிக்க ஒலிக்குறிகளை அமைத்து மொழியை ஆக்கிக்கொண்டனர். அவ்வொலிக் குறிகளின் அமைப்புக்குரிய ஆதிக்காரணங்கள பெரும்பாலும் இன்று நம்மால் அறிய முடியாதிருக்கின்றன. ஆகவே அச் சொற்கள் இடுகுறிச் சொற்களெனலாகும். முன்னோர் ஒவ்வொரு பொருள்களையும் செயல்களையும் குறிக்க அமைத்த ஒலிகுறிகளைத் திருத்தமுற உச்சரிக்க அறிந்து கொள்வதே திருந்திய மொழிப் பயிற்சி. தலைமுறை தலைமுறையாக வரும் பழைய சொற்களோடு புதிதாக அறியப்படும் பொருள்களையும் செயல்களையும் குறிக்கும் சொற்களும் பிற்காலங்களில் வந்து சேரும். இவ்வாறு

காலப்போக்கில் மொழி வளர்ச்சியுறும். பழைய சொற்களினிடத்தைப் புதிய சொற்கள் எடுத்துக்கொள்ளப் பழைய சொற்கள் சில வழக் கொழியும். இவ்வாறு மொழி, என்றும் ஒரு படித் தாயிராது காலந்தோறும் பல மாற்றங்களுக் குட்பட்டு வரும்.

பேச்சினால் அண்மையிலுள்ளவர்களுக்கே கருத் தினை உணர்த்துதல் கூடும்; சேய்மையிலுள்ளவர் களுக்கு உணர்த்துதல் இயலாது. மக்கள் தம் எண்ணங்களைத் தொலைவிலுள்ளவர்களுக்கு உணர்த்த விரும்பினார்கள். ஆகவே அவர்கள் ஒவ் வொரு பொருளையும் செயலையும் சித்திரங்களால் விளக்கி எழுதும் முறையைக் கையாண்டார்கள்[1]. இவ்வாறு எழுதப்பட்ட எழுத்துகள் சித்திர எழுத்து கள் எனப்பட்டன[1]. சுருக்கியும் விரைந்தும் எழுதும் முறையில் இச்சித்திரங்கள் கீறுகளாக வமைந்தன. ஆரம்பகால மக்கள் எல்லோரும் இவ்வகைச் சித்திர எழுத்துகளையே வழங்கினர்.

சித்திர எழுத்து ஒலிமுறையில் சொற்களை உணர்த்த மாட்டாதனவாயின. ஆகவே அவர்கள் பொருள்களின் சித்திரங்களை எழுதி அச்சித்திரங்கள் குறிக்கும் பொருட் பெயர்களின் முதலசைகளைச் சேர்த்து வாசிக்க எண்ணிய சொற்களின் உச்சரிப்பு

---

1. "காணப்பட்ட வுருவ மெல்லாம்
மாணக்காட்டும் வகைமை நாடி
வழுவிலோவியன் கைவினை போல
எழுதப்படுவ துருவெழுத்தாகும்"

—(யாப்பருங் கலவிருத்தியுரை மேற்கோள்)

வரக்கூடிய முறையில் எழுதினர். பின்பு ஒவ்வொரு சொல்லைக் குறிக்கவும் ஒவ்வொரு குறியீடு அமைக்கப் பட்டது. இக் குறியீடுகளும் சித்திர எழுத்தைப் பின் பற்றியனவே. இவ்வகை எழுத்துமுறை இவ்வுலக மக்கள் எல்லோரிடையும் காணப்பட்டது. இம்முறை யிலன்றிக் கயிற்றில் முடிச்சிட்டும் வாசிக்கக்கூடிய முறையைப் பேரு (Peru) மக்கள் அறிந்திருந்தனர்[1]. இன்னும் சிலர் மரத்தில் வெட்டிடுதலால் மொழியை வாசிக்க அறிந்திருந்தனர். ஆரம்பகால மனிதனின் விவேகம் ஆச்சரியப்படத் தக்கமுறையில் வேலை செய்திருக்கின்றது. மொழி ஆராய்ச்சியாளர் ஆரம்ப காலமக்களின் விவேகத்தைப் புகழாமல் இல்லை. மொழியில் எத்தனை ஒலிக்குறிகள் இருக்கின்றன என அறிந்து ஒவ்வொரு ஒலியையும் குறிக்க ஒவ்வோர் குறியை அமைத்து, எழுத்துகளைச் சேர்த் தெழுதிச் சொற்களை உண்டாக்கி, அவைகளை அடுக்கி வசனங்களை எழுதும் முறை பிற்காலத்துத் தோன்றியது.

இற்றைக்கு ஐயாயிரம் ஆண்டுகளின் முன் இந்தியா சுமேரியா பபிலோன் சீனு கிழக்குத் தீவுகள்

---

1. அமெரிக்காவிற் காணப்படும் புராதன சித்திர மொன்றில் தலைப்பாகை அணிந்த மாவுத்தன் யானையை ஒட்டுவது காணப்படுதலின் இந்தியாவுக்கும் அமெரிக்கா வுக்குமிடையில் முற்காலத்திற்போக்கு வரத்திருந்த தெனக் கருதப்படுகிறது. யானை, அமெரிக்காவிற் காணப்படாத மிருகம். இன்னும் அங்கு மாயா என்னும் இடத்திற் காணப் படும் சிற்பங்கள் இந்திய சிற்பங்களை ஒத்திருக்கின்றன. The art of Maya Civilization was well developed. The nearest resemblances can be found in South Indian Carvings—O.L. O.H.—H.G. Wells.

எகிப்து அமெரிக்கா முதலிய தேசங்களிலெல்லாம் வழங்கிய எழுத்து முறை ஒன்றென்பதைப் பழைய எழுத்து ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்.

சிந்துநதிப் பள்ளத்தாக்கிற் கிடைத்த முத்திரைகளிற் காணப்பட்ட எழுத்துகளோடு உலகின் பல பாகங்களில் வழங்கிய எழுத்துகளையும் ஒப்புநோக்கிய ஹெரஸ் பாதிரியார் கூறியிருப்பது வருமாறு :

"மகன்யோதரோ எழுத்துகளைப் போன்றன இலிபிய வனாந்தரத்தை அடுத்த செலிமா என்னுமிடத்திற் காணப்படுகின்றன. இதனைப் பேராசிரியர் இலாங்டன் என்பவரும் குறிப்பிட்டுள்ளார்.

"மகன்யோதரோ எழுத்துக் குறிகள் போன்ற ஐபீரிய (ஸ்பானிய) எழுத்துக் குறிகளையும் அவை போன்ற உச்சரிப்பு ஒலிகளையும் ஐபீரிய மொழியிற் காணலாம். (இம்மொழி பாஸ்க்கு எனவும் வழங்கும்.)

"எதிரூஸ்கிய (பழைய இத்தாலிய) மொழி எழுத்துகள் இலிபிய மொழி இனத்தைச் சார்ந்தன. இம்மொழியில் மகன்யோதரோ எழுத்துக் குறியீடுகளையும் உச்சரிப்பு ஒலிகளையும் காண்பது வில்லங்கமன்று.

"பிந்திய இலிபிய மொழி எழுத்துகளும் நுமிதிய பேபெரிய (Numidic and Berberic) எழுத்துகளும் முன் குறிப்பிட்ட இயல்பினவே.

"மினோவ எழுத்துகள் மிகப் பழையன. இவை மகன்யோதரோ எழுத்துகளோடு கிட்டிய ஒற்றுமை உடையன. சைப்பிரஸ் எழுத்து மினோவ எழுத்தின் ஒரு பிரிவினதே.

"சிலமொழிகள் எழுத்துகள் இல்லாமல் இருந்தன. அம்மொழிகளுக்குரியோர் திராவிடரோடு ஊடாடிய பின் மகன்யோதரோ எழுத்துகளைக் கையாண்டனர். பின்பு அவர்கள் அவ்வெழுத்துகளைத் தாமே விருத்தி செய்தனர்.

"சுமேரிய மொழிக்கும் மகன்யோதரோமொழிக்கும் நெருங்கிய உறவு உண்டு. இக்கொள்கையைப் பேராசிரியர் இலாங்டன் என்பார் தமது விரிவுரைகளில் நன்கு வலியுறுத்தியுள்ளார்.

"ஆப்பெழுத்துக்கள் சுமேரிய எழுத்துகளினின்றும் பிற்காலங்களில் விருத்தியடைந்தன.

"பழைய எல்லம் மொழி எழுத்துக்கள் இன்னும் வாசிக்கப்படாமல் இருக்கின்றன.

"பழைய சீனஎழுத்த்துக்கும் மகன்யோதரோ எழுத்துக்கும் நெருங்கிய தொடர்புண்டு. இது இவ்வளவு காலமும் ஒருவரின் கருத்திலும் படவில்லை. மகன்யோதரோ எழுத்துகளும் பழைய சீன எழுத்துகளும் ஒரு தாய் வயிற்றிற்பிறந்த இரண்டு பிள்ளைகள் என்று கூறலாம். கோயங் (Hoang கி. மு. 2500) கூற்றால் இது வலியுறுகின்றது.

"சாபிய அல்லது தென் அராபிய எழுத்துகள் இன்றும் மகன்யோதரோ எழுத்துக்குறிகள் சிலவற்றைக் காப்பாற்றி வைத்திருக்கின்றன. கிழக்குத் தீவுகளின் எழுத்துகள் பெரும்பாலும் மகன்யோதரோ எழுத்துகளைப் போலவே இருக்கின்றன; சில ஒன்றாகவே காணப்படுகின்றன.*"

---

* Light of the Mohenjo—Daro Fr. Heras—New Review—1936.

சி. ஆர். ஹன்றர் என்னும் ஆசிரியர் கூறி யிருப்பது வருமாறு :

[1] "துளையிட்ட பழைய இந்திய நாணயங்களிற் காணப்படும் அடையாளங்களும் மகன்யோதரோ எழுத்துகளைப் பின்பற்றியனவே. மகனயோதரோ எழுத்துகளிலிருந்து பிராமி எழுத்து மாத்திரமன்று தென் அராபிய மினேவ எழுத்துகளும் பிறந்தன. மகன்யோதரோ எழுத்துகள் தெற்கு ஆசியாவழியாக வந்து பொனிசிய கிரேக்க, உரோமை எழுத்துகளைப் பிறப்பித்திருக்கின்றன. பிராமியையும் அதன் வழி வந்த மொழிகளையும் தனியே விடுதும்."

அவுஸ்திரேலிய கிழக்கிந்திய மொழிச் சொற் கள் ஒன்ருகவே காணப்படுகின்றனவென்று அம் மொழிகளை நன்கு ஆராய்ந்தோர் நுவல்கின்றனர். ஆரியருக்கும் தமிழருக்கும் முற்பட்ட இந்திய மக்கள் என்னும் நூலிற் கூறியிருப்பது வருமாறு :

"அவுஸ்திரேலிய ஆசிய மொழிச் சொற்கள் பலவும் சுமேரியச் சொற்கள் பலவும் ஒன்ருகக்காணப் படுதலை பிரிசிலுஸ்கி என்பவர் ஆராய்ந்து காட்டி யிருக்கின்ருர். றெவெட் என்பவர், ஓசேனியா ஐரோப்பா ஆபிரிக்கா முதலிய நாடுகளுக்கு நாகரிகத் தைப் பரப்பியவர்கள் சுமேரியராய் இருக்கலாம் எனக் கூறியுள்ளார்."[2] சுமேரியமும் தமிழும் ஓர்

---

1. Riddles of Mohenjo—daro.—C. R. Hunter New Review Vol. 3—p. 314.

2. Prof. Przy Lwski has compared a series of Austro Asiatic words with Sumerian and has discovered important analogies. Rivet also in his article already

இனமொழிகளென்பது முன் பலவிடங்களில் விளக்கப்பட்டது.

"சுமேரியம் எல்லம் முதலிய மொழிகள் திராவிடமொழிகளோடு ஒலி முறையில் ஒற்றுமை யுடையன. ஆகவே டாக்டர் சத்தேசி என்பார் கிரேத்தா, இலிசிய, சுமேரிய, எல்லம் மொழிகள் ஒரே தொடர்புடையன என்றும், ஐசியன் தீவுகள் சின்ன ஆசியா மெசபெத்தேமியா முதலிய நாடுகள் ஒரே நாகரிக இணைப்பு உடையனவாயிருந்தன வென்றும் கூறுவர்" (திராவிட இந்தியா—பக். 41—42)

மக்கள் இன ஆராய்ச்சியாளர் இந்தியாமுதல் ஸ்பானியா வரையில் ஒரே இன மக்கள் வாழ்ந்தார்கள் எனக்கூறுவர் [1]. இந்திய நாகரிகத்தில் திராவிடரின் பகுதி என்னும் நூலில் புளூர் (Fleure) என்னும் ஆசிரியர் மத்திய தரை மக்களதும் திராவிட மக்களதும் உடற்கூறுகளை ஒப்புநோக்கி இரு கூட்டத்தினரும் ஒரே உற்பத்தியைச் சார்ந்தவர்கள் என நிறுவியிருக்கின்றார் [2].

எப்படி மத்தியதரை மக்களும் திராவிட மக்களும் ஒரு இனத்தவர்களாகக் காணப்படுகிறார் களோ அப்படியே அவர்களது மொழிகளும் ஒரே

---

referred to suggests that the Sumerian had probably played an important role as agents of transmission of culture elements between Oceania and Europe and Africa —Pre-Aryan and Pre-Dravidian in India—P. X.

1. Outline of History P. 79 H. G. wells.
2. The Dravidian Elements in Indian culture—P.37

உற்பத்தியைச் சார்ந்தன என இக்கால மொழிநூலார் ஆராய்ந்து கூறியிருக்கின்றனர். மொழிநூலார் கூறிய முடிவுகளை எல்லாம் ஒருங்கு வைத்து ஒப்புநோக்கிய வெல்சு என்னும் ஆசிரியர் மத்தியதரை நாடுகளில் ஆதியில் வழங்கிய ஆரியமல்லாததும் கமத்தியம் அல்லாததுமாகிய மொழி பாஸ்க்கு (Basque) எனப்படும் என்றும் அது திராவிட மொழிக்கு நெருங்கிய உறவுள்ளதென்றும் குறிப்பிட்டிருக்கின்றார். அவர் கூறியிருப்பதன் சுருக்கம் வருமாறு :

"பாஸ்க்கு மொழி, காக்கேசிய மலைப்பக்கங்களிற் பேசப்படும் மொழிக்கு இனமானது ; ஒரு காலத்தில் அது மிகவும் வியாபகமடைந்திருந்தது ; முந்திய கமத்திய மொழிக் கூட்டங்களாக வியாபகமடைந்து மத்தியதரை மக்களாற் பேசப்பட்டது ; தெற்கு ஐரோப்பாவிலும் மேற்கு ஆசியாவிலும் வழங்கியது ; இந்தியாவிலுள்ள திராவிட மொழிக்கு நெருங்கிய தொடர்புடையது.

"மேற்கு, தெற்கு ஐரோப்பாவில் பத்தாயிரம் ஆண்டுகளுக்குமுன் மொழிக்கூட்டங்கள் தோன்றியிருந்தன. ஆரியமொழி வருதலும் அவை மறைந்தன. பழைய மொழியைச் சார்ந்தவை [1]கிரேத்தா, இலிதிய மொழிகள். இவை [2]பாஸ்க்கு மொழியைச் சேர்ந்தவை ஆகலாம்.

"மங்கோலியம், பாஸ்க்கு காக்கேசியம் முதலிய மொழிகளை இணைக்கும் மொழி சுமேரியமாக இருக்கலாம். இது உண்மையாகவிருந்தால் பாஸ்க்கு, காக்கேசி

---

1. Cretan 2. காக்கேசியம், திராவிடம், சுமேரியம் எல்லம் மொழிக் குலங்கள்.

யம் திராவிடம் மங்கோலியம் முதலிய மொழிகள் இன்னும் மிகப் பழைய மொழிகளாகும். ஆரியம் செமித்தியம் கமித்தியம் முதலிய மொழிகளைத்தொடுக்கும் மொழி ஒன்று கண்டுபிடிக்கப்படாம லிருக்கலாம். குட்டியினும் விலங்குகள் எப்படி பல்லி முன்னோரி லிருந்துவிருத்தி அடைந்து பல்லிக்கு இனமாயிருக்கின்றனவோ, அதுபோன்ற இனமே அம்மொழிக்கும் இம்மொழிகளுக்கும் இருக்கலாம்.[1]"

கிழக்கிந்தியத்தீவு, மகன்யோதரோ எழுத்துகளைப்போன்ற எழுத்துகள் பொறிக்கப்பட்டதும் நாற்பது 'தொன்' நிறையுள்ளதுமாகிய பெரிய கல் ஒன்று பசிபிக்கடற் றீவுகளுள் ஒன்றாகிய பியூசித் தீவுக்கு அருகாமையில் கண்டுபிடிக்கப்பட்டது. இதில் அநேக சுவாஸ்திக அடையாளங்கள் வெட்டப்பட்டிருக்கின்றன. இக்கல்லில் எழுதப்பட்ட எழுத்துகள் முன் இங்கு இருந்து கடலுள் மறைந்துபோன நிலப்பரப்பின் வாழ்ந்த மக்களது நாகரிக சின்னமாயிருத்தல் வேண்டுமென்பது ஆராய்ச்சியாளர் கருத்தாகும். இதன் விபரம் வருமாறு:

---

1. Outline of History p. 85 H. G. Wells.

They (philologists) find Basque more akin to certain similarly stranded vestiges of speech found in Caucusian mountains and they are disposed to regard it as a last surviving member, much checked and specialized, of a race very widely extended group of Pre-Hamitic languages, otherwise extinet, spoken chiefly by peoples of that brunet Mediterranean race which once occupied most of western and southern Europe and

"நாற்பது 'தொன்' நிறையுள்ளதும் நாலு அங்குல ஆழத்தில் பெரிய சுவாஸ்திக அடையாளங்கள் வெட்டப்பட்டதுமாகிய பெரிய கல், பசிபிக்கடலில் ஒரு பெரிய நிலப்பரப்பு கடலுள் மூழ்கிப்போனதற்கு அடையாளமாகக் கிடைத்துள்ளது. இக்கல் நியூயோக்கு வாசிகளான புறூஸ் சேர்டியன், பாகன்ஸ் டொக் என்னும் இரு சகோதரரால் கண்டு பிடிக்கப்பட்டது. பியுசிக்கு அயலிலுள்ள 'வித்தி லேவு' (Viti Levu) என்னும் தீவு மக்களிடையே, பியூசி, பிதிலேவு என்னும் இரு தீவுகளும் ஒரு காலத்தில் ஒன்ருக இருந்தனவென்றும் ஒருகாலத்தில் நேர்ந்த குழப்பத்தில் அவை இரண்டாகப்பட்டனவென்றும், வித்திலேவிலுள்ளவர்கள் தங்கள் எழுத்துச் சாதனங்களைப் பெரிய கல் ஒன்றில் பொறித்து அடுத்த தீவுக்குக் கொண்டுசெல்ல முயன்றபோது அது கடலுள் தாழ்ந்து போயிற்றென்றும் கூறும் பழங்கதை ஒன்று இருந்தது. இதை ஆதாரமாகக் கொண்டு தேடியபோது அவ்விபரமுள்ள கல் கிடைத்தது. இக்கல் ஆதியில் ஒரு மலை அடிவாரத்தில் இருந்திருத்தல் வேண்டும். சில காலத்தில் அது சரிந்து விழுந்து பல துண்டுகளாக நொறுங்கிப் போயிற்று. அதின் ஒரு துண்டின் நிறை நாற்பது தொன். அதில் வெட்டப்பட்ட எழுத்துக்கள் சீன எழுத்துக்கள்போலக் காணப்பட்டன. அவ்வெழுத்

---

western Asia. They think it may have been closely related to the Dravidian of India, and the languages of the peoples of the heliolithic culture who spread eastward through East Indies to Polynesia and beyond. O. L. O. H. P. 88.

துக்களை நிழற்படம் பிடித்துச் சீனுவுக்கு அனுப்பிய போது சீன ஆராய்ச்சியாளர் அவை சீன எழுத்துக எல்ல எனக் கூறினர்.

"இவ்வெழுத்துகள் கிழக்குத்தீவு எழுத்துகளை இணைப்பனவாயிருக்கலாமா? என்பது ஆலோசிக்கப் படுகின்றது. பசிபிக் கடலின் பாதி, மலாயக் குடா நாடு, பனுமாக் கால்வாய் முதலியவைகள் வரையில் பரந்திருந்து கடலுள் மறைந்த மு (Mu) என்னும் கண்டத்தின் பழைய நாகரிகத்தை அறிவிக்கும் சின்னமாக இது இருக்கலாம். இக் கல்லிற் காணப் படும் உருவங்கள் கிழக்குத் தீவுகளில் பரும்படியாக வெட்டப்பட்ட மனிதச்சிலைகள் போலக் காணப்படு கின்றன.[1]"

கெல்பேட் என்னும் ஆசிரியர் கோறிய மொழி இலக்கணம் திராவிட மொழிகளின் இலக்கணங்க ளோடு ஒத்து நிற்பதை ஆராய்ந்து காட்டி யுள்ளார்.[2]

## தமிழ்ப் பெயர்க் காரணம்

**தமிழ்** என்னுஞ் சொல் தமிழ் மக்கள் வழங்கும் மொழிக்குப் பெயர் மாத்திரமல்லாமல் இனிமை நீர்மை என்னும் பொருள்களையும் உணர்த்து மென் பது. "இனிமையு நீர்மையுந் தமிழெனலாகும்" என்னும் பிங்கலச் சூத்திரத்தாலறியலாகும். இலக்

1. The Times of Ceylon Sunday Illustrated—

2. H. B. Halbert has issued a Comparative grammar of Korian and certain of Dravidian languages of India to demonstrate the close affinity he finds between them - Outiine of History.—P. 45—H. G. Wells.

கியங்களில் "[1]தேனுறை தமிழ்' "[2]தமிழ் தழீஇ ய சாயல்' எனத் தமிழ் என்னுஞ் சொல் இனிமையை உணர்த்த ஆளப்பட்டிருத்தல் காண்க. இச்சொல் இனிமையை உணர்த்தற்குரிய காரணம், அதன் மூலம் ஆதியன அறிய முடியாதன.

சிவன், சூரியன், முருகன் முதலிய கடவுளர் களோடும், தமிழர் சமயத்தோடும் தமிழ் தொடர் புடையதென்பது தமிழ் நாட்டில் தொன்றுதொட் டுள்ள ஐதீகம். இவ்வைதீகம் பற்றியே "தென் மொழியை உலகமெலாந் தொழுதேத்தும் — குட முனிக்கு வலியுறுத்தார் கொல் லேற்றுப்பாகர்" "செந் தமிழ்ப் பரமாசாரியனுகிய முருகக்கடவுள்" அகத்தி யருக்குத் தமிழ் அறிவுறுத்தினர், என்பன போன்ற வாக்கியங்கள் எழுந்தன.

3. "சந்தன மும்புழுகுந் தண்பனி நீருடனே
கொந்தலர் சண்பகமுங் கொண்டு வணங்கினேன்
வந்திடும் வல்வினைநோய் மாற்றுவ துன்பதமே
செந்தமி ழாகரனே சிவசிவ சூரியனே" (பழைய பாடல்)

"அசலே சுரர்பத் திரனே குணதிக்
கருணைதயமுத் தமிழோனே" — திருப்புகழ்.

4. "கள்ளென் றெலிக்குஞ் சுடரோன்பால் தோன்றியுயிர்
உள்ளந் துலக்கி யுலாவலின் — தெள்ளுபுகழ்ப்
பண்டைப் பெரியார்தாம் பைந்தமிழை ஓண்டமிழ்
ஓண்டமி ழென்மனர் போந்து."

---

1. கல்லாடம், 2. சிந்தாமணி, 3. மாகறல் கார்த்தி கேய முதலியார் மொழிநூலில் எடுத்தாண்ட பழைய செய் யுள். 4. இதுவும் மொழிநூலிற் கண்டது. புதிய செய்யு ளாகத் தெரிகிறது. ஷை நூலார் தாமம் என்னும் சூரியனைக் குறிக்கும் சொல்லில் நின்றும் தமிழ் தோன்றிற்றென்பர்.

உண்மையான தமிழ்நாடு குமரிமுனைக்குத் தெற்கிலேயே இருந்தது. பஃறுளியாற்றிற்கும் குமரி மலைக்கும் இடையே கிடந்த நாற்பத்தொன்பது தண்டமிழ் நாடுகளோடு பாண்டியரின் தலைநகராகிய தென் மதுரையையும், கடல்கொண்டது எனப்படு மாற்றாலும், கடல் கொள்ளப்பட்ட பெருவள நாட்டின் அரசனும் செங்கோ தமிழறிவு சான்ற பெருமககள் பேரவைகூட்டித் தமிழை வளர்த்தா னெப்படுகின்றமையானும் இது எளிதிற் புலனாகும். "செங்கோ - நேராற்றும் பேரவையில் நாற்பெரு மக்கள் சூழ்ந்தேத்தப் - பார்ரரசு செய்த தமிழ்ப் பைந்தேவி." எனவரும் தமிழ்விடு தூதும் இதனை வலியுறுத்தும்.

இஞ்ஞான்று இலங்கை எனப்படும் தீவு கடல் வாய்ப்பட்ட குமரிகண்டத்தின் ஓர் பகுதியாகும். இலங்கை ஏழ்தெங்க நாடு எனப்பட்டதின் ஓர் பகுதி யெனக் கருதப்படுகின்றது. செங்கோன்தரைச் செலவில் ஏழ்தெங்க நாட்டு முத்தூர் அகத்தியன் பாடல் என ஒன்று காணப்படுகின்றது. எப்படிப் பிற் காலத்தில் பாண்டியரின் தலைநகராகிய மதுரை தமிழ் வழக்கிற்கு மத்திய இடமாக வயங்கிற்றோ அவ்வாறே இலங்கையும் கடல் கோட்குமுன் தமிழுக்கு நடுவிடமாகத் திகழ்ந்த தெனலாம்

ஓங்கலிடை வந்துயர்ந்தோர் தொழ விளங்கி
ஏங்கொலி நீர்ஞாலத் திருளகற்று — மாங்கவற்றுள்
மின்னோர் தனியாழி வெங்கதிரொன் றேனையது
தன்னே ரிலாத தமிழ்.
(தண்டி அலங்கார மேற்கோள்). இது சூரியனுக்கும் தமிழுக்கும் சிலேடை.

தமிழ் நாட்டின் அழிவுக்குப் பின்பும் இலங்கை, சுமத்திரா சாவகம் கிழக்கிந்தியத் தீவுகளை உள்ளடக்கிய பெரிய நிலப்பரப்பாக விளங்கிற்று. பாஸ்கராச்சாரியர் (கி. பி. 1150) எழுதிய வானநூற்குறிப்பில் பூமத்திய இரேகை பழைய இலங்கைக் கூடாகச் செல்கின்றதெனக் குறிப்பிட்டுள்ளார். இலங்கை நூல்கள் கூறுகின்றபடி இப்பொழுது உள்ள இலங்கை முன்னைய இலங்கையின் ஒரு சிறு பகுதியாகும்[1].

செங்கோன் என்னுமரசன், கந்தபுராணத்திற் கூறப்படும் சூரன் ஆவன் என்பது சிலர் கருத்து. இராவணனது ஆணை தண்டகாரணியம் வரையிற் சென்றது.

---

1, "இராசாவலி என்னும் நூல்," துவாபர உலகத்திலே இராவணனின் துட்டத்தனத்தின் பயனாக அவன் கோட்டையையும் 25 மாளிகைகளையும் மன்னருக்கும் தூத்துக்குடிக்கும் இடைப்பட்ட 400, 000 வீதிகளையும் கடல் கொண்டது. இப்பொழுது கலனிதிசனின் துட்ட நடக்கை காரணமாக 100, 000 துறைப் பட்டினங்களும் 970 மீன் பிடிகாரர் குப்பங்களும், முத்துக் குளிப்போரின் 470 குறிச்சிகளுமாக இலங்கையின் பன்னிரண்டில் பதினொரு பாகம் பெருங்கடலுள் ஆழ்ந்தது. மன்னர் அவ்வழிவுக்குத் தப்பிக்கொண்டது எனக்கூறும்.

இராவணன் மலை எடுத்ததென்பது திருகோண மலையையே என்பது ஐதீகம். அம்மலையில் இராவணன் வெட்டு என ஒரு பகுதி உண்டு. இம்மலையின் ஒரு பகுதியை இராவணன் எடுத்துத் தனது இராசதானியில் வைக்க முயற்சி பலியாமையே இராவணன் மலையெடுத்த வரலாறாக மாறியிருத்தல்கூடும். இராவணன் மலையை எடுக்க திபேத்திலுள்ள கைலாத்துக்குச் சென்றானென்பது பொருத்தமாகவில்லை. கோணேசர், முன்னீசுவரர், திருக்கேசுவரர் ஆலயங்கள் இராவணன் காலத்திற்கு முற்பட்டன என்பது ஐதீகம்.

மேற்கு ஆசியா எகிப்து முதலிய விடங்களிற் காணப்படுவன போன்ற தமிழ் மக்களின் புராதன கட்டிட இடி பாடுகள் இந்தியாவிற் காணப்படாமைக்குக் காரணம் அவை கடலுள் மறைந்து போயினமையே.

இலங்கையின் பழைய பெயராகிய எல் என்னும் சொல்லினின்றே தமிழ் என்னும் பெயர் பிறந்ததெனத் தெரிகின்றது. அதனை ஆராய்வாம்.

ஒரு தேசத்தின் பெயர் மக்களுக்காய் மக்களின் பெயர் மொழிக்காதல் இயல்பு. தமிழ் என்னும் பெயரும் இவ்வாறு தோன்றியிருக்க வேண்டுமென்பது திண்ணம்.

இலங்கையின் பழைய பெயர் **எல்.** இது இலங்கை மக்களின் பழைய மொழி **எலு** வாதலின் அறியலாகும். எல், அம் இறுதி நிலை பெற்று எல்லமாய்ப் பின் [1]ஈழம் எனத் திரிந்தது. இலங்கையினின்றும் இந்திய நாடு போந்து வாழ்ந்த மக்கள் இன்றும் ஈழுவர் எனப்படுகின்றனர். எல் என்னுஞ் சொல் அல், இல் என மேற்கு ஆசிய நாடுகளில் திரிந்து வழங்கிற்று.

மாகறல் கார்த்திகேய முதலியார் **தமிழ், சூரியனை உணர்த்தும் தாமம் என்னும் சொல்லினின்றும் பிறந்த**தெனக் கூறுகின்றார். சுமேரிய மக்களின் (சூரிய குமாரனான) மனு, தாமுஸ் அல்லது தாம்சி (Tamzi or Tammuz) எனப் பட்டார். இதனாலும் சூரியனுக்கும் தாமத்துக்கும் யாதோ தொடர் பிருத்தல் தெரிகிறது.

---

1. இதன் விரிவை முன்னுரையிற் காண்க.

இலங்கையில் சூரியனின் ஒளிவிளங்கும் மலை சிவன் ஒளிமலை எனப்படுகின்றது. அது ஒருபோது தாமம்-எல் எனவும் வழங்கியிருத்தல் கூடும். **தாமம் எல்** என்பதற்கு நேர் பொருள் **சிவன் ஒளி** என்பதே. எல்லம் எனப்பட்ட நாடு சிவன் ஒளி மலையுள்ள சிறப்பினால் தாமம் எல்லம் எனப் பட்டிருக்கலாம். பின் **தாமம்** என்பது **தாம்** என மருவித் தாமெல்லம் என்றாய், எல்லம் ஈழமான போது அது தாமீழமாய்ப் பின் தமிழாயிற்று எனக்கோடல் பொருத்தமாகத் தெரிகின்றது. தமிழ் என்பது இரு சொற்கள் சேர்ந்த சொல்லென நன்கு புலப்படுகின்றது. இவ்வாறு கொள்ளுமிடத்துத் தமிழ் சூரியனினின்றும் பிறந்தது ; தமிழுக்கும் சிவ பெருமான் முருகன் என்னும் கடவுளர்களுக்கும்நெருங்கியதொடர்புண்டு; தமிழும் தமிழரின் சிவமதமும் பிரிக்கக்கூடாதன, எனத்தொன்றுதொட்டு வரும் ஐதீகங்கள் விளக்க முறுகின்றன வாதல் காண்க. தமிழ் என்பதற்குச் **சிவன் ஒளி** என்பது பொருள்.

இவ்வடிப்படையான ஐதீகத்தைக் கொண்டே முருகக்கடவுள் செந்தமிழ்ப் பராமாசாரியன் ; சிவபெருமான் அகத்தியருக்கு இலக்கணமருளினார் என்பனபோனற வரலாறுகள் எழுந்தன.

எல்லம் என்பது பொதியம், மலையம் இமயம் என்பன போலத் தமிழ் மயமான உச்சரிப்புடைய பெயராயிருக்கின்றது. தமிழ் என்னும் சொல் இரு சொற்கள் ஒட்டினால் தோன்றிப்பின் ஒட்டுத்தெரி யாதவாறு மருவிவிட்டதெனத் தெரிகிறது. தமிழைக்

குறிக்கப் பிறமொழியாளர் வழங்கிய சொற்களைக் கொண்டும் இதனை அறியலாகும்.[1]

## திரண்டபொருள்.

ஆரம்பத்தில் ஒரு கூட்டத்தினராக வாழ்ந்த மக்கள் எழுத்தெழுதும் முறைகளை ஒரே வகையாக ஆரம்பித்து ஒரே வகையான முறையில் விருத்தி செய்து மகன்யோதரோ எழுத்துகள் போன்ற எழுத்தெழுதும் முறை வரையில் சென்றனர். பின்பு எழுத்துக்களும் மொழிகளும் பல கூட்டங்களாகப் பிரிந்து பெருகின. இவை எல்லாம் அவ்வாறு கிளைத்துப் பெருகுதற்கு அடி மரம் போன்றுள்ளது, கடலாற் கொள்ளப்பட்ட நாட்டில் வழங்கியதும், அதின் தொடர்பான இந்தியக்குடா நாட்டில் அன்று முதல் இன்று வரை வழங்கி வருவதுமாகிய தமிழ் என்பது குன்றின் மேலிட்ட விளக்குப்போல் விளங்குகின்றது. தமிழ் என்றுமுளதென்னும் ஐதீகம் பிழையன்று. இவ்வைதீகம் பற்றியே "என்றுமுள தமிழ்" என்னும் திருவாக்கெழுந்தது.

"பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினு மோர்
எல்லையறு பரம்பொருள் முன்னிருந்தபடியிருப்பதுபோல்
கன்னடமும் களிதெலுங்கும் கவின் மலையாளமும் துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே யொன்று பல வாயிடினும்
ஆரியம் போலுலக வழக்கழிந்தொழிந்து சிதையாவுன்
சீரிளமைத்திறம் வியந்து செயல மறந்து போற்றுதுமே."

---

1 According to Heradotus was Termilae (as it is written by Hecataes) Tremilae and it is confirmed by native inscriptions in which the name is written Thramilae—Lycia.—E. Britannica.

பெரிபுளுஸ்: (கி. மு. 4ம் நூற்றூண்டு) தமேராய் (Tamirai.) தமிழ்நாடு 'லிமுரிகே' (Limyrike): பாளி மொழியில்: தமிள (Damila.)

என்னும் ஆசிரியர் சுந்தரம்பிள்ளை அவர்கள் கூற்றின் உண்மை அறிந்து மகிழத்தக்கது.

> *முன்விருந்த பாலிமொழியுங் கீர்வாணமும்
> துன்னுங்கருப்பையிலே தோய்வதற்கு—முன்னரே
> பண்டைக் காலத்தே பரவை கொண்ட மூன்னூழி
> மண்டலத்திலே பேர்வள நாட்டின்—மண்டு நீர்ப்
> பேராற்றருகில் பிறங்கு மணிமலையில்
> சீராற்றுஞ் செங்கோற்றிறற்செங்கோ—நேராற்றும்
> பேரவையிலே நூற்பெருமக்கள் சூழ்ந்தேத்தப்
> பாரசு செய்த தமிழ்ப் பைந்தேவி.'' (தமிழ் விடுதூது)

---

# இயல் V.

## தமிழர் நாகரிகம்

### பழைய கற்காலம்

கற்கால மக்களின் வரலாறு ஏட்டில் எழுதப் படாதது. அவர்கள் வரலாற்றினை அவர்கள் கையினுற் செய்து உபயோகித்த பொருள்கள் கூறுகின்றன. பழங்கற்காலந் தொட்டு நாவலந்தீவு எனப்பட்ட இந்தியநாடு மக்களுக்கு உறைவிடமா யிருந்து வருகின்றது. அக்கால மக்கள் தீக்கடை கோல்களால் தீ உண்டாக்க அறிந்திருந்தனர். அவர்களின் என்புகளோடும் ஆயுதங்களோடும் மட்பாண்டங்கள் காணப்படாமையின் அக்காலத்து

---

* இப்பாடல் தமிழ் விடுதூது என்னும் நூலிலுள்ள தென்னமாகறல்கார்த்திகேய முதலியாரால் தனது மொழி நூலில் எடுத்துக் காட்டப்பட்டது; அரிய பொருள் போதிந்தது. அவர் கூறிய தமிழ் வீடு தூது இதுவரையில் அச்சில் வந்ததாகத் தெரியவில்லை. இது பொதிந்தபொருள் செங்கோன் தரைச் செலவு, அதன் உரை சிலப்பதிகார உரைகளில் காணப்படுகின்றன.

அவர்கள் மட்பாண்டங்கள் செய்யவில்லை எனத் தெரிகிறது. மட்பாண்டங்கள் புதிய கற்கால மக்க ளால் செய்யப்பட்டனவாகலாம். இறந்தவர்களை வைத்துஅடக்கஞ் செய்தற்கும், அவர்களுக்கு உணவு முதலியன வைப்பதற்குமாகவே அவைகள் ஆரம் பத்திற் செய்யப்படலாயின. இறந்தவர்களின் உடலைப் பறவைகளும் விலங்குகளும் உண்ணும்படி எறிந்துவிடுதலே அக்கால வழக்கு. அவர்கள் ஆடை உடுக்கவில்லை. பரதகண்டத்தின் வெப்பதட்ப நிலைக்கு ஆடையுடுக்கவேண்டிய அவசியம் ஏற்படவில்லை. இன்றும் சில இடங்களில் நிர்வாணம் பரிசுத்தத்துக்கு அடையாளமெனக் கருதப்படுகின்றது. அவர்கள் வேட்டையாடிக் கொன்ற விலங்குகளின் தோல்களைக் காயவிட்டு முதுகின்மேல் போர்த்தார்கள் ; இன்றும் சில காட்டுச்சாதியினர் செய்வதுபோல இலைகளை மாலையாகத் தொடுத்துக் கழுத்தில் அணிந்தார்கள். மர உரியும் உடையாக உபயோகிக்கப்பட்டது.

தோல் மரவுரி முதலியன நிர்வாணத்திற்கு அடுத்தபடியில் பரிசுத்தமுடையனவாக இன்றும் கருதப்படுகின்றன. (மக்கள் நிர்வாண மல்லாமல் இருக்கும் காலத்தில்) சிவன் புலித்தோலை அணிய லானார். யோகப்பயிற்சி செய்வோர் புலித்தோல் மான்தோல் ஆசனங்களைப் பயன்படுத்துகின்றனர். அக்கால மனிதன் குலதெய்வங்களுக்குப் பலி செலுத்தியிருக்கலாம், கிராமங்களில் காணப்படும் கீழ்த்தர வழிபாடுகளில் கிராம தேவதைகளுக்கு இரத்தப்பலிகள் இடப்படுகின்றன. அத்தெய்வங்க ளிற் பல பெண்பாலன. அவை ஆதிகால மனிதன்

பயன்படுத்திய தண்டாயுதங்களைப் பிடித்திருக்கின்றன. அத்தெய்வ வழிபாடுகள் ஆதிகாலத்திலிருந்தே வருகின்றன. கோயிற் கோபுரங்களிலும் சிலைகளிலும் காணப்படும் சில மக்கள், கடவுளர் உருவங்களுக்குக் கோரப்பற்கள் வளர்ந்து காணப்படுகின்றன, ஆரம்பகால மனிதனுக்குக் கோரப்பற்கள் வளர்ந்திருந்தனவென்று உயிர் நூற்புலவராகிய தாவின் கூறுவர். ஆகவே அக்காலந்தொட்டே மக்கள் சித்திரங்கள் எழுதவும், உருவங்கள் வெட்டவும் அறிந்திருந்தார்கள் எனக்கூறலாம். அக்காலத் தெய்வங்கள் பெரும்பாலன பெண்பாலினவா யிருத்தலின் அக்காலம் பெண்களுக்கே சொத்து உரிமையும் அதிகாரமும் இருந்தன என்று தெரிகிறது, ஆகமக் கொள்கைகள் பரவியபோது பெண்தெய்வம் காளியாகவும் மற்றைத்தெய்வங்கள் அதனைச் சேவிப்பவர்களாகவும் ஆக்கப்பட்டன. நரபலி கொடுப்பது அக்காலத்தில் அறியப்படாத தன்று. மயிர் நகம்போன்றவற்றை இன்றும் மக்கள் தெய்வங்கட்குப் பலியிடுவது பழைய நரபலியின் ஞாபகமே.

## புதிய கற்காலம்

புதிய கற்காலத்தில் மக்கள் மிருகங்களை வளர்க்க ஆரம்பித்தார்கள். முதல் வளர்க்கப்பட்ட மிருகம் நாய் ஆகலாம். வெள்ளாடு செம்மறி ஆடு, பசு எருது எருமை என்பன அடுத்தபடியில் பழக்கி வளர்க்கப்பட்டன. ஆடுகளும் மாடுகளும் மேய்ச்சலளவில் மனிதனின் உதவியை வேண்டாதன. ஆனால் அவை மேய்வதற்கேற்ற நல்ல புற்றரைகள் வேண்டும். ஆகவே அக்கால மக்கள் அலைந்து திரிவதும், ஓரிடத்

திற் றங்குவதுமாகிய இருவகை வாழ்க்கையை மேற் கொண்டனர். இவ்வகை வாழ்க்கையில் பல குடும்பங் கள் ஒன்றுசேர்ந்து வாழ்ந்தன. பல குடும்பங்களுக்கு ஒருவன் தலைவனுனன். அவன் கோன் எனப்பட் டான். இவ்வகைப் பல குடும்பங்களுக் கிடையில் பெரிய கோன் ஒருவன் ஏற்பட்டான். இம்முறையில் குடித்தலைவர்களும் அரசர்களும் ஏற்பட்டனர். கோன் என்னுஞ் சொல் அரசனைக் குறிக்கும். அரசனது மனை மண்மதிலால் அரண் செய்யப்பட்டது. ஆகவே அது கோட்டை அலலது அரண்மனை எனப்பட்டது.

மனிதன் தன் உணவுக்கு வேண்டிய பயிர்களை உண்டாக்கப் பிற்காலத்தே அறிந்தான். கற்காலத்தில் இடப்பட்ட பயிர், நெல், சாமை, அவரை, துவரை, வாழை, மா முதலியன. பயிரிடப்பட்ட முறையிலிருந்து நிலம் நன்செய் புன்செய் என இரண்டாகப் பிரிக்கப்பட்டது. நெல் விளையும் நிலம் நன்செய் என்றும், மற்றவை விளையும் நிலம் புன்செய் என்றும் வழங்கின. கடற்கரை மக் கள் மரக்கலங்கள் செய்து கடலிற் சென்றனர். ஆற் ருேரங்களில் வாழ்ந்தோர் நிலத்தைப் பண்படுத்தித் தானியங்களை விளைவித்தனர். இவர்கள் வேளாளர், காராளர் எனப்பட்டனர். மலைகளில் வாழ்ந்தோர் குறவர் எனவும், மணல் வெளிகளில் அலைந்து வேட்டையாடி வாழ்ந்தோர் எயினர், மறவர் எனவும் பட்டனர்.

புதிய கற்கால ஆயுதங்கள் பழைய கற்கால ஆயு தங்களைவிடப் பல. புதிய கற்கால வீடுகள் தடிகளாற் கட்டப்பட்டுப் புல்லால் வேயப்பட்டன. மரம் இலகு

வில் கறையான் முதலிய எறும்புகளாலும், நிலத்தி னுலும் உண்டு அழிந்துபோகத் தக்கனவாதலின் கற் கால இல்லங்கள் ஒன்றேனும் காணப்படவில்லை. இக் காலமக்கள் பலவகை மட்பாண்டங்களைச் செய்து உபயோகித்தனர். பஞ்சினுல் ஆடைகள் செய்யப் பட்டன. ஆடைகள் செய்தற்குப் பயன்படும் எல்லாவகையான கற்காலக் கருவிகளும் கண்டெடுக் கப்பட்டுள்ளன. ஆயுதங்கள் மட்பாண்டங்கள் மர வேலைகள் போன்ற தொழில்கள் புரியும் சாதிப் பிரிவுகள் அக்காலத்திற் ரோன்றியிருக்கலாம். அரை யில் ஒரு துண்டு உடுத்துத் தலையில் ஒரு துண்டைக் கட்டுவதே அக்கால உடை. தாவரங்களிலிருந்து எடுக்கப்படும் நீலம் மஞ்சள் சிவப்பு முதலிய சாயங்கள் ஆடைகளுக்கு ஊட்டப்பட்டன. மணிகள், எலும்புகளாற் செய்த மாலைகளும் சங்கினுற்செய்த வளைகளும் அணியப்பட்டன. சீப்புகளினுல் கூந்தல் வாரி முடியப்பட்டது.

அக்காலத்தவர் இறந்தவர்களை மண்தாழிகளில் வைத்துப் புதைத்தார்கள். தாழிகளின் முன்பு அரிசி முதலியனவும் அவர்கள் உபயோகித்த பொருள்களும் வைக்கப்பட்டன. அரிசியும் ஆயுதங்களும் இறந்த வர்களுக்கு அடுத்த உலகிற் பயன்படும் என்று அவர்கள் கருதினுர்கள். இறந்தபின் உயிர்கள் நிலை பெறுவதை அக்காலத்தவர் நம்பினுர்கள். சில சமாதி களில் பெரிய கற்கள் நிறுத்தப்பட்டன. சில சமாதி களில் இறந்தவரை வைத்துப் புதைத்த நான்கு கால் களுள்ள தாழிகள் காணப்பட்டன. தக்கண இந்தியா விற் காணப்படுவன போன்ற கல் நாட்டப்பட்ட

சமாதிகள், பிரித்தன், பிரான்ஸ், மத்தியசர்மனி, ஸ்காந்திநேவியா, சாடினியா, சிரியா, காக்கேசஸ் முதலிய இடங்களிற் காணப்பட்டன. கோப்பை அடையாளங்களுள்ள கற்களும் இந்திய சமாதிகளிற் காணப்படுகின்றன. இந்திய சமாதிகளுட் காணப் பட்ட பல மட்பாண்டங்கள் திருய் (Troy) நகர் அழி பாடுகளிற் காணப்பட்டவற்றை ஒத்திருக்கின்றன. மைசூரிலுள்ள 'பிருன்சிய' பாறைக்குச் சமீபத்தில் சிலுவைக்குறியுள்ள சட்டித்துண்டு ஒன்று கண்டு எடுக்கப்பட்டது. இது சுவாஸ்திக அடையாளம் என்பதிற் சந்தேகமில்லை. இவை திருசன் (Trojan) சுவாஸ்திக அடையாளங்களை ஒத்துள்ளன. கற் காலத்தில் இந்தியா மற்ற ஆசிய ஆபிரிக்க ஐரோப் பிய நாடுகளோடு தொடர்பு வைத்திருந்ததென இதனால் விளங்குகிறது. இந்தியா முழுமையிலும் ஒரே மொழி பேசப்பட்டது. பஞ்சாப் முதல் ஒரிசாவரையில் இப்பொழுது வழங்கும் மொழி களின் இலக்கண அமைப்புத் தமிழை ஒத்துள்ளது. சொற்களை மாத்திரமன்று, மொழிகளின் அமைப் பை நோக்குவதாலும் மொழிகளின் உற்பத்தியை அறியலாகும். பொன் வெள்ளி செம்பு இரும்பு முதலிய உலோகங்கள் கற்கால முடிவிற் கண்டு பிடிக்கப்பட்டிருக்கலாம் இவைக்கு இடப்பட்டிருக் கும் பெயர்கள் தனித் தமிழ்ப்பெயர்களாகவே காணப் படுகின்றன. பழைய கற்கால சின்னங்களுட் சிவலிங் கங்கள் காணப்பட்டன. கற்காலம் கி. மு. 20,000, முதல் கி. மு. 5000 வரையில் இருந்த தெனக் கூறு தல் பிழையாகாது. வீடுகளுக்கு மூங்கில் வேலியிடு

தல் கவணில் கல்வைத் தெறிதல், அம்மி, குழவி, திரிகை உரல் முதலியவைகளை கல்லினால் செய்து உபயோகித்தல் முதலியன கற்கால வழக்கங்களே. இன்றும் ஆலயங்களிலுள்ள பிரதான விக்கிரகம் கல்லினாலேயே செய்யப்படுகின்றன.

## வெண்கலக் காலம்

மகன்யோதரோ கரப்பா என்னும் இடங்களில் செம்பு வெண்கலம் முதலிய உலோகங்களாற் செய்யப்பட்ட பொருள்கள் காணப்பட்டன; இரும்புப் பொருள்கள் ஒன்றேனும் கண்டெடுக்கப்படவில்லை. இதனால் அந் நகர்களின் நாகரிகம் வெண்கலக் காலத்தது என்று நன்கு தெளிவாகின்றது. கற்கால நாகரிகத்தைவிட உலோககால நாகரிகமே முன்னேற்றமானது.

## மகன்யோதரோ நாகரிகம்

இக்கால வீடுகள் செங்கற்களாற் கட்டப்பட்டன. வீடுகளுக்கு மாடிகளும் படிக்கட்டுகளும் இருந்தன. கூரைகள் தட்டையானவை. உத்திரங்கள்மீது தடிப்பான பாயைவிரித்து அதன் மீது களிமண் பரப்பிக் கூரைகள் செய்யப்பட்டன.மாடிகளிலிருந்து கழிவுநீர் கீழே செல்வதற்குச் சூளையிட்ட மண் குழாய்கள் பொருத்தி வைக்கப்பட்டன. பெரிய வீதி முப்பத்துமூன்று அடி அகலம் வரையில் உள்ளது. அப்பெரிய வீதியைப் பல சிறிய வீதிகள் குறுக்கே தொட்டன. வீதிகளின் இருமருங்கும் இல்லங்கள் அமைக்கப்பட்டிருந்தன. ஒவ்வொரு வீட்டிற்கும் கிணறு உண்டு. கிணற்றை அடுத்துக் குளிக்குமறைகள் இருந்தன. ஒவ்வொரு வீட்டின் கழிவுநீரும் செங்

கற்பதித்தவோ, சூளையிட்ட குழாய்கள் அமைந்தவோ ஆன வாய்க்கால் வழியே சென்று வீதியிலுள்ள வாய்க்காலில் விழுந்தது. சிறிய வீதிகள் வழியே செல்லும் நீர் பெரிய வீதியிலுள்ள பெரிய வாய்க்காலில் விழும். எல்லா வாய்க்கால்களும் செங்கற் பதிக்கப் பட்டவை. ஒவ்வொரு வீட்டிற்கும், பள்ளியறை குளிக்குமறை, அந்தப்புரம், சமையலறை, தலைவாயில் முதலியன விருந்தன. வீடுகள், நடுவே முற்றமுள்ள 'நாற்சார்' வீடுகளாகக் கட்டப்பட்டன.

படிக்கட்டுகளுள்ள நீராடுந்துறைகளும் பொதுச் சாவடிகளும், பூம்பொழில்களும், மக்கள் தங்கிச் செல்லும் மடங்களும் காணப்பட்டன.

குயவர் தண்டு சக்கரங்கள் கொண்டு அழகிய மட்பாண்டங்கள் செய்தார்கள். அவை அக்காலத்து எகிப்து பபிலோன் தேசங்களில் காணப்பட்டன போலவே இருந்தன. சில பானைசட்டிகள் வண்ணம் பூசப்பட்டும் சில மினு மினுப்பாயிருக்கும் பொருட்டு மெருகிடுங் கருவியால் அழுத்தஞ் செய்யப்பட்டு மிருந்தன. சில பாண்டங்கள் மீது அழகிய பறவை கள், விலங்குகள், மரங்கள், இலைகள் பூக்கள் எழுதப் பட்டுள்ளன. இப்பாண்டங்களுட் சில, நீரருந்தும் கிண்ணங்கள், தட்டுகள், மூக்குடைய பாத்திரங்கள், தாம்பாளங்கள், பெரிய தாழிகள், நீர்த்தொட்டிகள், பலவகை மூடிகள், புரிமணைகள், பூசைத் தட்டுகள், அனற்சட்டிகள், அடி ஒடுங்கித் தலை பெருத்த தாழிகள், கைபிடியுடைய சட்டிகள் இருபுறமுங் கைபிடியுடைய கலயங்கள், மைக்கூடுகள் என்பன.

மண்ணாற்செய்து சூளையிட்ட எலிப்பொறிகள், அம்மிகுழவி, திரிகை, உரல், பலவகைக் கைவிளக்கு கள், மெழுகு வர்த்திவைக்கும் தட்டுகள், கல் ஊசி, எலும்பு ஊசி, கற்கோடரி, செம்பு அரிவாள் மரக் கட்டில், நாணற்பாய் கோரைப்பாய், மேசை நாற் காலி, முக்காலி முதலியன வீடுகளிற் காணப்பட்ட பொருள்களாகும்.

அக்காலச் சிறுவர் ஒவ்வொருவரும் பல விளை யாட்டுப் பொருள்களைவைத்து விளையாடினர்கள். அவை மண்ணினாலும் மரத்தினாலும் செய்யப்பட்ட பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, ஆண் பெண் பதுமைகள், சிறு செப்புகள் முதலியன. அவை மண்ணினாற் செய்யப்பட்டு வெளிப்புறம் மினு மினுப்பாயிருக்கும்படி அழுத்தஞ் செய்யப்பட் டுள்ளன. இன்னும் சங்கு தந்தம், சிப்பி, ஓடுகள், எலும்புகளால் செய்யப்பட்ட பல பொருள்கள், மண் பந்து, கிலுகிலுப்பை, வாற்புறம் தலையுடையகோழி. குருவி போன்ற ஊதுகுழல், தலை அசைக்கும் எருது, வண்டிகள், சொக்கட்டான் காய்கள், தாயக் கட்டை கள் முதலியவும் பிறவும் காணப்பட்டன.

பொன் வெள்ளி செம்பு வெண்கலம் வெள்ளீயம் காரீயம் தந்தம், ஓடு, களிமண், சங்கு முதலிய வைகளாற் செய்த ஆபரணங்களையும் அக்காலமக்கள் பூண்டனர்.

வெண்கலத்தாற் செய்யப்பட்ட கத்தி வாள், ஈட்டி, அம்பு, பல பருமையுடைய கோப்பைகள், நீர்ச்சாடிகள், தட்டுகள், தாழிகள், அவைகளின் மூடி கள், உடைவாள், இடைவாள், வேல், அம்புமுனை,

பல்லுள்ள கூன்வாள், உளி, தோல்சீவும் உளி கோடாரி, வாய்ச்சி, சவரக்கத்தி, தூண்டிலமுள் ஆடைதைக்கும் ஊசி, கொழு, முதலியன உபயோகிக்கப்பட்டன. இன்னும் கொண்டை ஊசிகள், தெறிகள், முகம்பார்க்கும் கண்ணாடிகள், கண்ணுக்கு மைதீட்டும் குச்சிகள், பதுமைகள், மணிகள் பாண்டங்கள் முதலியன செம்பினாலும் வெண்கலத்தாலும் செய்யப்பட்டன.பொன் வெள்ளி செம்பு வெண்கலம் உயர்ந்த கற்கள்என்பவைகளால் செய்யப்பட்ட ஆபரணங்களையும் தையலார் அணிந்தனர். அக்கால நங்கையர் அணிந்த ஆபரணங்களிற் சில, பொன் மணி வெள்ளி மணி பச்சைக் கற்கள், பளிங்கு மணிகள் கோத்துச் செய்யப்பட்ட கழுத்து மாலைகள், மணி வடங்களால் ஆன அரைப்பட்டிகள், தங்கமணிகள் கோத்துச் செய்யப்பட்ட கையணிகள், தங்கம் வெள்ளி செம்பு வெண்கலம் பளிங்கு கறுப்புக்கல் சங்கு சிப்பி களிமண் முதலியவற்றாற் செய்யப்பட்ட கைவளைகள், கால்வளைகள், நெற்றிச் சுட்டிகள், தங்கக் காதோலைகள், மூக்குத்திகள், பலவகை மோதிரங்கள், பலவகைத் தெறிகள், நாடாக்கள், கொண்டை ஊசிகள், கற்கள் பதித்த மோதிரங்கள், ஓவியம் அழுத்திய மணிகள், தாயத்துகள், தங்கக் கவசமிட்ட மணிகள் முதலியன,

அக்கால மக்களின் உணவு: ஆடு மாடு பன்றி ஆமை முதலை பலவகைப் பறவைகளின் இறைச்சிகள், காய்கறிகள், பால், வெண்ணெய், தயிர், மோர், நெய், பலவகைப் பழங்கள், கோதுமை, நெல் வாளி,

பட்டாணி எள், பேரீச்சம்பழம், தானியங்களை அரைத்துச் செய்யப்படும் பலவகைத் தீன்பண்டங்கள் என்பன.

அக்காலமக்கள் அரையில் ஒன்றும் தலையில் ஒன்றுமாக இரண்டு உடைகளைத் தரித்தனர் பெண்கள் கோயிற் சிற்பங்களிற் காணப்படுதல்போல அரையில் மாத்திரம் உடை அணிந்தனர். செல்வர் வேலைப்பாடுடைய ஆடையை மேலேயும் போர்த்தனர். நாட்டியப் பெண்கள் பெரும்பாலும் நிர்வாணமாகவே காணப்பட்டனர். எகிப்திய சித்திரங்களிலும் நாட்டியப்பெண்கள் இவ்வாறே காணப்படுகின்றனர்.

தந்தம், மாட்டுக்கொம்பு எலும்பு, மரம் முதலியவைகளாற் செய்யப்பட்ட சீப்புகள் உபயோகத்திலிருந்தன. சில சீப்புகள் தலையிற் செருகிக்கொள்ளப்பட்டன. இன்னும் இலங்கைச் சிங்களவர் சீப்பைத் தலையில் செருகுவர். பர்மியப் பெண்கள் கூந்தலில் சீப்பைச் செருகுகின்றனர். உலோகத் தகடுகள் மினுக்கஞ்செய்து முகம்பார்க்கும் கண்ணுடிகளாக உபயோகிக்கப்பட்டன.

பெண்கள் கூந்தலைப் பலவாறு கோதியும் பின்னியும் முடிந்தனர். சிலர் பின்னலை நாடாக்கொண்டு பூக்கள் போல முடிந்து பொன் வெள்ளி தந்த ஊசிகளைக் குத்தினர். ஆடவர் தலை மயிரை நீள வளர விட்டுச் சுருட்டிப் பின்புறம் முடிந்தனர். சிலர் உச்சிக் கொண்டை கட்டினர். சிலர் கூந்தலைக் குறுக வெட்டியும், வரிவரியாகத் தூங்கும்படி சுருட்டியும் விட்டிருந்தனர்.

ஆடவரும் மகளிரும் குச்சிகளால் கண்ணுக்கு மை எழுதிச் செங்காவிப் பொட்டிட்டனர். பொட்டிடும் பொடிகளை நத்தை ஓடுகளில் வைத்திருந்தனர்; முகத்திற்கு வாசங்கலந்த வெண்பொடியைத் தடவி அழகு செய்தனர்.

சிறுவர் கோலி பந்து முதலியவை ஆடிப் பொழுதுபோக்கினர். பெரியோர் சதுரங்கம் சொக்கட்டான் தாயம் முதலியன விளையாடினர். வில்லும் அம்புங் கொண்டு மிருகங்களை வேட்டையாடுவதும் கௌதாரிகளைப் போர் செய்ய விடுவதும் அக்கால மக்கள் பொழுது போக்குகளாயிருந்தன.

அக்காலத்தில் பலவகைத் தொழிற் பிரிவினர் இருந்தனர். அவர் கொத்தர், குயவர், கற்றச்சர், கன்னூர், பொற்கொல்லர், இரத்தினப் பரீட்சை செய்வோர், சிற்பர், ஓவியர், மருத்துவர், தோட்டிகள், மயிர்வினைஞர், பயிரிடும் வேளாண்மக்கள். நெசவுகாரர், கப்பல் செய்வோர், தையற்காரர், பாய்முடைவோர், வணிகர், பாடுவோர், ஆடுவோர், கணிதவல்லோர், எழுத்தறிபுலவர் எனப் பலராவர்.

அக்காலத்தவர் சிலர் இறந்தவர்களைப் புதைத்தனர். சிலர் சுட்டுச் சாம்பரை முட்டிகளில் இட்டு நிலத்திற் புதைத்து வைத்தனர்.

சுமைகளைச் எடுத்துச் செல்ல வண்டிகளும் எருதுகளும், கழுதைகளும் பயன்படுத்தப்பட்டன.

அக்காலத்தில் வணங்கப்பட்ட தெய்வங்கள். சிவன் இலிங்கம், கொம்புள்ள தெய்வங்கள் நாற்கைத் தெய்வங்கள், இடபங்கள்; ஒற்றைக் கொம்பு எருது, சூரியன், நாகம், புரு, கருடன், மரம், மரதேவதைகள்,

ஆறு முதலியன. சிவன் மூன்று கண்ணுடைய தெய்வமாகவும் பசுபதியாகவும் வழிபடப்பட்டார். அக்கால எழுத்தையும் மொழியையும் குறித்து முன் கூறியுள்ளோம்.

வெடிமருந்து, நீராவி, மின்சத்தி 'பெற்றோல்' எண்ணெய் முதலியவைகளின் உபயோகங்கள் இக்காலம் கண்டுபிடிக்கபபட்டுள்ளன. இவைகளின் உபயோகங்களை நீக்கிப் பார்க்கின் அக்கால மக்கள் இக்கால மக்களைவிட மிகமுன்னேற்றமடைந்திருந்தார்கள் என விளங்கும். முற்காலத்தவர்கள் எழுப்பிய பெரிய கட்டிடங்கள் இக்கால மக்களைப் பிரமிக்கச் செய்கின்றன. எகிப்திய சமாதிகள், தென்னிந்திய புராதன ஆலயங்கள் இலங்கைச் சிகிரியா மலைக் கோட்டை முதலியன உண்மையில் இக்கால மக்களுக்கு அதிசயம் விளைப்பனவே. முற்காலத்தவர்கள் எழுதிய நூல்களையே இன்றும் உயர்தரப் பரீட்சைகளுக்குப் பாடமாக மாணவர் பயிலுகின்றனர்.

## இரும்புக் காலம்

தென்னிந்தியாவிலே ஆதிச்சநல்லூர், புதுக்கோட்டை முதலிய இடங்களில் சரித்திர காலத்திற்கு முற்பட்ட சமாதிகள் தோண்டி ஆராயப்பட்டன. அவைகளுள் அக்கால மட்பாண்டங்களோடு இரும்பு ஆயுதங்களும் காணப்பட்டன. ஆகவே அக்கால நாகரிகம் தமிழ் மக்களது இரும்புக் காலத்தது என விளங்குகின்றது.

கி. மு. 1200-க்கு முன் ஆரிய மக்கள் இந்தியாவில் இல்லை எனச் சரித்திராசிரியர்கள் கூறுகின்

றனர்.[1] ஆரியர் இந்தியாவை அடைந்தபோது அங்கு வாழ்ந்த மக்கள் பெரிய கோட்டை கொத்தளங்களும், செல்வவளமும், நாகரிக உயர்வும், போராண்மையும் உடையவர்களாயிருந்தார்கள் என்பன அவர்கள் வேதவாக்குகளிலிருந்தே அறியக் கிடக்கின்றன. வேதங்களில் திராவிட மக்கள் தாசர், அசுரர் தானவர் தைத்தியர் எனக் கூறப்படுவர்.

"வேதபாடல்கள் செய்யப்படுகின்ற காலத்தில் தாசுக்கள் நகரங்களில் வாழ்ந்தனர். அந்நகரங்களில் வாழ்ந்த அரசர் பலரின் பெயர்கள் கூறப்பட்டுள்ளன. அவர்களிடத்தில் திரண்ட செல்வம் இருந்தது. அச்செல்வம் பசு, குதிரை தேர் முதலியன. இவை நூறு கதவுகளுள்ள கோட்டைகளுள் வைத்துக் காப்பாற்றப்பட்டன. தாசுக்கள் மைதானங்களிலும் மலைகளிலும் சொத்துக்களை வைத்திருந்த செல்வப் பெருமக்கள். அவர்கள் பொன்னுபரணங்களை அணிந்தார்கள். தாசுக்கள் வெள்ளி இரும்புக் கோட்டைகளில் வாழ்ந்தார்கள். இந்திரன் பல தடவைகளில் தன்னை வணங்கும் திவோதாசர்களுக்காக நூறு கற்கோட்டைகளில் இருந்த தாசர்களை வெற்றி கொண்டான்[2]" என்பன வேத பாடங்களிற் காணப்படுகின்றன. ஆரிய மக்கள் வடக்கிலிருந்து தெற்கே சிறிது சிறிதாகப் பரந்து வந்தபோது, முன்னரே அங்கு வாழ்ந்த மக்களுக்கும் அவர்களுக்குமிடையில் போர்கள் நிகழ்ந்தனவாயினும் பிற்காலங்களில்

---

1. The Vedic Aryan was not in India before 1200 B. C. C. R. Hunter—New Review VOL. 3—P. 314.

2. Pre-aryan Tamil Culture—P. 11—P. T. Srinivasa Ayengar.

அவர்களுக்கிடையில் கலப்பு விவாகங்கள் நடந்து இரு வரும் ஒன்று பட்டனர். புதிதாய் வந்த ஆரியர் பூர்வ குடிகளின் சீர்திருத்த முறைகளையே கையாள லாயினர். திராவிடரின் கலப்பால், அவர்கள் மொழி உச்சரிப்பு முறையிலும் வேறு வகைகளிலும் பெரும் மாறுதல்களடைந்தது.[1]

---

1. "ஆரியரென்போர் இந்திய நாட்டிற்குப் புதிதாக வந்தவர் களல்லர், தீவாயிலாகக் கடவுளைவழிபடுதல் தீயின் றிக் கடவுளை வழிபடுதல் என்னும் வேறுபாட்டினாலேயே இந்திய மக்கள் ஆரியர் திராவிடரென வெவ்வேறு பெயர் கள் பெறுவர்," என பி.தி. சீனிவாச ஐயங்காரவர்கள் தமது நூல்களில் எழுதியுள்ளார். இக்கொள்கையை வரலாற் ருசிரியர்கள் ஏற்றுக்கொள்வதில்லை. ஆரிய மக்களின் சந்ததி யினர் என்று தம்மைக் கூறிக்கொள்ளும் ஒரு கூட்டத்தினர், தாம் இந்தியாவுக்கு அயலினின்று வந்தவர்களாய், கிரேக்கர். சேர்மனியர், பரசீகர் முதலிய பிறசாதி மக்களுக்கு இன முடையவர்கள் என்று கூறுதற்கு உள்ளம் இசையாமையி னாலேயே இவ்வாறு கூறுவரென்க, இவ்வாறு கொள்ளுதற்கு ஆதாரங்கிடையாது. திலகர், ஆரியரின் பழமையை ஆராய்ந்து அவர்களின் இருக்குவேத பாடல்கள் சில அவர் கள் வடதுருவ நாடுகளில் வாழும்போது பாடப்பட்டன வென்றும், தேவர்களுக்கு இரவு ஆறு திங்கள், பகல் ஆறு திங்கள் என்றது வடதுருவ நாடுகளில் இரவும் பகலும் இக் காலஎல்லைகளை உடையன வாதலினென்றும் நன்கு காட்டியுள்ளார்.

ஆரியர் பிறநாடுகளினின்றும் வந்தார்களென்பதற்கு அவர்களின் நிறமும் மொழியுமே சான்று பகரும். பிற சான்றுகள் வேண்டா.

ஆரியரென்போர் முன் கடலாலழிவுண்ட தமிழகத்தி னின்றும் சென்ற மத்தியதரை மக்களின் ஒரு பிரிவினராய் காக்கேசிய மலையை அடுத்த நாடுகளில் நீண்டகாலம் வாழ்ந்து நிறம் மொழி முதலிய மாற்றங்கள் உடையவர்க

ளாய் ஐரோப்பிய நாடுகளில் முன் வாழ்ந்துகொண்டிருந்த கபிலநிற (பொதுநிற) மக்களோடும், பரசீக வட இந்திய மக்களோடும் கலந்து ஒன்றுபட்டோராவர். இவர்களிடையே வருணபேதம் உண்டானபோது அவருள் பிராமணர், சத்திரியர், வைசியர் என்போர் தம்மை மற்றவர்களிலிருந்து பிரித்தறியும் பொருட்டுக் குலக் குறிகளாகிய (Badge) நூலணிந்தனர். வேறு நாடுகளில் வதியும் ஆரிய மக்களெவரேனும் நூல் அணியாமையின், இது இந்து ஆரியரின் வழக்கமெனத் தெரிகின்றது. தென்னாட்டில் நெசவு தொழிலைக் கைக்கொண்ட வெட்டியாரும் பிறரும் நூல் அணிந்தார்களெனத் தெரிகிறது "பூணூல் தரித்துக் கொள்வோம்" "(ஞானவெட்டி) இன்று கூர்ச்சரத்தினின்றும் தென்னாடு போந்த சௌராட்டிரர் என்னும் நெசவு செய்வோரும் நூலணிவதைக் காண்கிறோம். நூலே கரகம் முக்கோல் மணையே-ஆயுங்காலை அந்தணர்க்குரிய" என்னும் தொல்காப்பியத்திற் கூறிய நூல் சுவடியாதல் வேண்டும். துறவோர் சுவடியைக் கொண்டு செல்லுதலே இன்றையவும் பண்டையவும் வழக்கு. கலித்தொகையிலே முக்கோற்பகவரைக் குறித்துவரும் பாடலில் பூணூல் குறிக்கப்படாதிருத்தல் நோக்கத்தக்கது. (கலி - 9) அந்தணர், பிராமணர், பார்ப்பார் புரோகிதர் என்பன ஆதியில் வெவ்வேறு கூட்டத்தினரைக் குறித்தனவேனும் பிற்காலத்தில் அவை ஒரே குலத்தினரைக் குறிக்க வழங்குகின்றன. அந்தணரென்போர் துறவோர் கூட்டத்தினர். பார்ப்பான் என்பதற்கு நன்றும் தீதும் ஆராய்ந்துரைப்போன் எனப் பேராசிரியர் உரை கூறியுள்ளார். அகப் பொருட்டுறையில் வரும் பார்ப்பான் பிராமணன் என்று சொல்ல முடியவில்லை. பிராமணரென்போர் வட நாட்டினின்றும் பிரமாணம் எனப்பட்ட தமது நூல்களோடு தென்னாடு போந்தோர். இவர்கள் தென்னாட்டில் கலப்புமணங்கள் செய்தனர். அவர் தொடர்பிலுள்ளவர்களே இன்று பிராமணர் எனப்படுவோர். அறிவர்கணிகள் எனத்தமிழ் நாட்டில் சிலர் இருந்தனர். இவர்கள் சோதிட வல்லுநர் எனத் தெரிகிறது. இவர்கள் நற்கருமங்களுக்கு நல்ல நாள் ஆராய்ந்து கூறுவர். அறிவர் என்பதற்கு மூவகைக்காலமும் நெறியின் அறிந்து கூறுவோர் என்று உரையாசிரியர்கள் பொருள் கூறியுள்ளனர். ஆரியர் தமிழர் கலப்பினாலே தமிழில் மணிப்பிரவாள நடை முதலியன தோன்றி அதன் தூய்மையைக் கெடுத்தன.

## இந்நூலாராய்ச்சியிற் பயன்றரும் சில குறிப்புகள்

"கிழக்காப்பிரிக்காவிலும் இந்தியாவிலும் கிடைத்த கல்லாயுதங்கள் சில ஒரே வடிவம், ஒரே நிறை, ஒரே பருமை உடையனவாகக் காணப்பட்டமையின் தென்னிந்தியாவின் தொடர்ச்சியாகக் கிழக்காபிரிக்கா வரையில் ஒரு பெரிய நிலப்பரப்பு இருந்ததெனக் கருதப்படுகிறது". சரித்திரகாலத்திற்கு முற்பட்ட இந்தியா (Prehistoric India)

"றிச்சாட் என்பவர் பழைய இத்தாலிய (Etruscan) நாகரிகத்துக்கும் திராவிடர் நாகரிகத்துக்கும் தொடர்பிருக்கக்கூடுமென்பதைக் காட்டியுள்ளார். யசாடனி (Yazadani) என்பவர் தக்கண இந்தியாவிற் காணப்பட்ட கல்லாற் செய்யப்பட்ட பாண்டங்களும் அவைகளில் எழுதப்பட்ட சொந்தக்காரரின் அடையாளங்களும் எகிப்திய அரச பரம்பரைக்காலத்தும் அதற்கு முன்னும் உள்ள அவ்வகைப் பாண்டங்களையும் அவைகளிற் பொறிக்கப்பட்ட எழுத்துக்களையும் ஒத்திருக்கின்றன என்றுகாட்டியுளார். ஷை ப.326

"யாங்சி (Yang She) நாகரிக காலத்து (சீனரது) மட்பாண்டங்கள் இந்திய மட்பாண்டங்களை ஒத்திருக்கின்றமையை அன்டேர்சன் என்பவர் எடுத்துக் காட்டியுள்ளார் ஷை-ப. 455.

"அசுர் என்பது பகற்றெய்வத்தைக் குறிக்கும். அது இப்பொழுது இந்திய பழங்கதைகளிலுள்ள அசுரரைக் குறிக்கின்றது. இது பரசீகரின் சொராஸ்ரிய மதத்தொடர்பாகச் சூரியனைக் குறிக்க வழங்கும் அசுர(Ashura)என்பதைக் குறிக்குமெனச் சமக்கிருத மொழியாளர் ஒத்துக்கொள்கின்றனர். சாதிப் பிரிவினைகளும் அது தொடர்பான போராட்டங்களும் நடந்த காலங்களில் பிராமணர். அசுரர் என்பதற்கு இராட்சதர், பூதங்கள் எனப் பொருள் கொடுத்தனர். "நாகரிகத்தை ஆக்கினோர்" (Makers of Civilization P. 417) வடல்

"பரிசுத்த யோவான் உயர்த்திச் சென்ற சிலுவை உண்மையான சூரியக்குறியாகும். உண்மையான சிலுவைக்

குறி (கிறித்து நாதர்) சிலுவையி லறையப்பட்ட குறியன்று. சூரிய இலச்சினையே" ஷெ. ப. 504.

திராவிட இந்தியாவிலும் எகிப்திலும் காணப்படும் மக்களது பழக்க வழக்கங்கள் நம்பிக்கைகள் முதலியன தெற்கு ஆசிய மக்களுக்கும் எகிப்தியருக்கும் அடிப்படை ஒரே நாகரிகம் என்பதை விளக்குகின்றன—மனிதன்—எலியட் சிமித் (Man—Elliot Smith)—*1918*—P. *13*.

லிபியர் (Libians) எகிப்தியரைப்போலவே பசு மாமிசம் புசிக்கமாட்டார். இவர்களுக்கு அயலேயுள்ள சவிசியரின் (Zaveces) பெண்கள் யுத்தத்தில். தேரோட்டுகின்றனர். (இது தசரதனுக்குக் கைகேயி தேரோட்டியதை நினைவூட்டுகிறது) பொனிசியர் கிரீசு நாட்டில் தங்கியபோது கிரேக்கர் அவர்களிடமிருந்து உபயோகமான பொருள்கள் பலவற்றைக் கற்றனர். எழுத்தெழுதும் முறை அவற்றுள் முக்கியமானது. அதற்குமுன் அவர்கள் எழுத்தெழுதும் முறையை அறிந்திருக்கவில்லை—கெரதோதசு.

சூரிய சந்திர வமிசச் சத்தினர் அசுர உற்பத்தியைச் சேர்ந்தோர். அசுரர் தமது உற்பத்தியைச் சூரியனினின்றும் கூறினர். சூரியனிலிருந்தே சந்திரன் தோன்றிற்று. —சூரியனும் சர்ப்பமும்—ஒல்ட்காம்—ப. *71*.

"கன்ன பரம்பரைக் கதைகள், எகிப்தியரின் ஹதொர் (Hathor) என்னும் பசுவடிவான சூரியக் கடவுள் பண்டு தேசத்தினின்றும் வந்தார் எனக் கூறுகின்றன" கிட்டிய கிழக்குத் தேசங்களின் வரலாறு—ஹோல்—பக. *91*.

சற்லி (Sutle) ஆற்றைக் கடக்க முன் உள்ள சமயக் கொள்கைகளில் இந்திய பூர்வ குடிகளுக்கு ஆரியர் கடமைப் படவில்லை என்பது உண்மையே. சற்லி ஆற்றைக் கடந்த பின் எழுதப்பட்ட சம்கிதைகளையும் பிரமாணங்களையும் பற்றி அவ்வாறு கூறுதல் இயலாது—சி. ஆர். ஹன்ரர். (New Review—*1936*.)

கைலை இலங்கையிலுள்ள தென்பது :—

"கதமுதிர்ந்த மலர்த் தென்கயிலையிற் கடமிழிந்-திதனை யின்றடி பெயர்ப்பனென்றெய்தி ரிருதன்" "வானெடுத்த வரையைக் கரம் வளைந்து தழுவித்-தானெடுத்தலும்" தக்கண கைலாய புராணம்—சிங்கைச் செகராச சேகரன். தக்கண கயிலாயம்—திரிகோணமலை.

இலங்கையும் மேரு எனப்படும் என்பது :—

"மேரு மீதில் விளங்கிய சென்னியொன்
றுரமாருதங் கொண்டிங்கண மைத்ததே"
"அமைத்த பொன்மலை யாதலினைப் பெயர்
சமைத்த வீழ மென்றுதழீ இயதால்"

ஷை புராணம்.

இளாவிருதம் மேருவில் உண்டென்பதும், மேருவின் கொடுமுடி ஒன்று எல்லம் எனப்பட்டதென்பதும் யாதோ ஓர் பழைய ஐதீகத்தின் பிரதி பிம்பம் எனத் தெரிகிறது.

"நடு ஆபிரிக்காவில் நீலநதி உற்பத்தியைப் பற்றிப் புராணங்களில் எழுதியிருக்கிறது. அதைப் படித்துத்தான் இக்காலத்தில் அந்நதியின் உற்பத்தித் தானத்தைக் கண்டு பிடித்திருக்கிறார்கள்"—இந்தியர் சரித்திரம்—பி. தி. சீனி வாச ஐயங்கார். எம். ஏ. எல். டி.

"பவேரு (ஆங்கிலத்தில் பாபிலோனியா) நகரத்தில் மூ. ர. சு. என்ற விலாசமுள்ள தமிழர் கடை. கி. மு. ஆறுந் நூற்றாண்டிலிருந்தது. அந்தக் கடைக் கணக்குகள். அவ்வூர் வழக்கப்பிரகாரம் களிமண்ணிலெழுதி வெய்யிலில் உலர்த் தப்பட்டன. அவ்வகையான கணக்குகள் இப்பொழுது அகப்பட்டிருக்கின்றன" ஷை—பக்-41.

மந்தானியரின் (Mandains) குருவுக்கு ஸ்கந்தா (Sh-kanda) என்று பெயர்.—E. Britannica.

"ஆர்மீனிய நாட்டில் கிருஷ்ணன் கோயில் ஒன்று கட்டிப் பலநாள் வரையிலும் கிருஷ்ணன் பூசை நடந்தது"—இந்தியர் சரித்திரம்—பக்-65.

"இராமர் பிறந்த காலத்தில் ஐந்து கிரகங்கள் உச்சமாயிருந்தன. வென்று சொல்லியிருக்கிறது. அவ்வாறு ஐந்து கிரகங்கள் கி. மு. 2000 ஆண்டில் உச்சமாயிருந்தன. ஆதலால்தான் இராமர் காலம் கி. மு. 2000 என்று மேலே எழுதியிருக்கிறது. இராமர் காலந்துக்கும் பாரத யுத்த காலத்துக்கும் நடுவில் அயோத்தியில் முப்பது அரசர் ஆண்டார்கள். பாரத யுத்த காலம் கி. மு. 1500 என்று நிச்சயிக்க அநேக ஆதாரங்களுண்டு.—ஷை பக்-24.

யுகத்தின் அளவையும் கலியுகம் 5000 வருடங்களுக்கு முன் உண்டாயிற்று என்ற கணக்கும் வெகு பிற்காலத்தில் உண்டாயின. அது சரித்திரங்களுக்கு ஒத்துவராது. அந்தக் கணக்குச் சோதிடத்திற்காக ஏற்பட்டது. சரித்திரத்திற்கு ஏற்பட்டதன்று. புராணக் கணக்கிற்கே இக்கணக்கு ஒத்துவருவதாயில்லை—ஷை—பக்·28.

## முடிவுரை

இந்நூலகத்துக் கூறப்பட்ட பொருள்கள் :—(1) மக்கள் ஒரு மத்திய இடத்திற்றோன்றி உலகின் பலபாகங்களிற் சென்று வாழ்கின்றனர் (2) மக்கள் மத்திய இடத்தைவிட்டுப் பிரிந்து பல குலங்களாகப் பெருகுவதற்குரிய காரணங்கள் (3) பண்டை மக்களது ஐதீகங்களும் நாகரிகப்பாங்கும் ஒரே வகையின (4) உலக மொழிகள் எல்லாம் ஒரு ஆதிமொழியினின்றும் பிரிந்த சிலமொழிகளினின்றும் (ஒரு தண்டிற் பூத்த பூங்கொத்துகள் போன்று) கிளைத்த கூட்டங் கூட்டமாகிய மொழிகள் (5) உலக மக்கட் குலங்கள் தோன்றுதற்கு அடிப்படையிலுள்ளோர் தமிழர் (6) உலக மொழிகளுக்கெல்லாம் ஆதிமொழி தமிழ் (7) இந்திய நாட்டில் வாழ்ந்த தமிழ் மக்களின் பழைய கற்கால புதிய கற்கால, வெண்கல கால நாகரிகங்கள் (10) ஆரியர் இந்தியாவுள் நுழைந்த காலத்துத் தமிழரின் நாகரிகம் என்பனவாகும்.

முற்றும்.

Printed at The Royal Printing Works, Madras.